176. ஓம் இயற்கை ஊக்கமும் சக்தியும் அருளும் இன்குரலுடைய/இன்குரலும் இயற்கை ஊக்கமும் சக்தியும் அருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

177. ஓம் அறிவைத்தன் வடிவாகக் கொண்ட ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

178. ஓம் ராமநாமத்தினை விடாது ஜபம் செய்தலை விரதமாக ஏற்று நடத்திய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

179. ஓம் நாதப்பனிமலை உச்சியினை முத்தமிடும் நாமஇன்பமாம் முகிலாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

180. ஓம் அசைவன, அசையாதன எல்லாவற்றுள்ளும் நுட்பமாய் வியாபித்துள்ள ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

181. ஓம் உணர்வாய் எங்கும் பரந்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

182. ஓம் இறை உணர்வினைத் தூண்டும் பாட்டுக்கள் கற்பித்த ஆசார்யனாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

183. ஓம் (சிஷ்ய) நாதசக்தியைத் தூண்டும் (சிஷ்ய நாதசக்தி யாரால் தூண்டப்பட்டதோ அந்த) ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

184. ஓம் அழகுறு ராமசந்திரனை இசையினால் ஏத்தித்துதித்த பக்தசந்திரனாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

185. ஓம் ஒளிமண்டலத்தால் முழுதும் சூழ்ப்பட்ட ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

186. ஓம் உடைந்த உள்ளத்துக்கு ஆறுதலளிக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்

187. ஓம் ராமனாகிய சந்திரனின் கிரணங்கள் கலந்த ஸ்வரத்தின் அழகிய உருவான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

188. ஓம் வெற்றியுடைய ராமனுக்கு வெற்றி எனக் குயில் குரலில் முழங்கும் கவியாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

189. ஓம் மடமையைப் போக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

190. ஓம் தன்னையே வழிபடும் பக்தமனதை வென்ற ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

191. ஓம் தன்னை வென்ற ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

192. ஓம் ஜீவன் முக்தரான (உலகில் வாழும் போதே விடுபட்ட நிலையினரான) ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

193. ஓம் ஸ்ரீராமனுடன் ஒன்றுபட்ட, பூஜிக்கப்பட்ட ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

194. ஓம் தங்கு தடையின்றி விரைந்தோடும் நாதகங்கையான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

195. ஓம் விரிந்து மலர்ந்த நாதபுஷ்பத்தினால் வழிபடப்பட்ட ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

196. ஓம் உண்மையான நாதச்செல்வத்தின் அருவியான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

197. ஓம் எல்லாமறிந்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

198. ஓம் அறிவு விழைபவருக்கு ஆசானாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

199. ஓம் அறிய வேண்டிய நாத ரஹஸ்யங்களின் களஞ்சியமான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

200. ஓம் மிக்க ஒளியுடைய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

201. ஓம் ஒளிரும் இன்னிசை ஆதவனாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

202. ஓம் ரீங்காரமிடும் ராமநாம ச்ருதியை ஒலிக்கும் தெய்வீகத் தம்பூராவான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

203. ஓம் இன்னொலியினை இறைக்கும் இசை நீர்வீழ்ச்சியான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

204. ஓம் தாளம் இனிது ஒலிக்க பஜனை செய்து நடமாடும் ஆனந்த வடிவான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

205. ஓம் மனக்குழப்பத்தையும் நிம்மதியின்மையையும் போக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

206. ஓம் நிம்மதியின்றித் தவிக்கும் சிஷ்யரின் புகலிடமான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

207. ஓம் ஸ்வரார்ணவம் எனும் இசைநூலின் விளக்கமே ஆன ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

208. ஓம் நாத ரஹஸ்யங்களை நன்கு விளக்கியுள்ள (யாரால் நாதரஹஸ்யங்கள் நன்கு விளக்கப்பட்டனவோ, அந்த) ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

209. ஓம் கருணையால் கனிந்த பார்வையுடைய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

210. ஓம் படிம வடிவுடை ஸ்ரீராமனாகிய தெய்வத்தின் பூஜையில் ஈடுபட்ட ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

211. ஓம் படிம வடிவில் சிஷ்ய பூஜை அறையினைப் புனிதப்படுத்தும் தெய்வமான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

212. ஓம் உடுக்கை முழங்கும் சிவனாரது பொன்மயவடிவை இதயத்தாமரையில் காண்பிக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

213. ஓம் 'ராம' 'ராம' என ஒலித்த இசை மணியாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

214. ஓம் தாரக நாமத்தை கோஷித்து முழங்கிய ஸத்குருவுக்கு நமஸ்-காரம்.

215. ஓம் மேலெழும்பிப் பறந்த இசைக்குயிலான (மேன்மையான பொருட்-செறிவுமிக்க பாட்டுக்கள் பலவும் செய்த) ஸத்குருநாதருக்கு நமஸ்காரம்.

216. ஓம் **நாதப்ரம்மானந்தத்தை அருளும் ஸ்ரீத்யாகப்ரம்ம ஸத்குருநாதருக்கு மீண்டும் மீண்டும் நமஸ்காரங்கள்.**

217. ஓம் வீணைஒலியினை ஒத்த இன்குரலுடைய ஸத்குருவுக்கு நமஸ்-காரம்.

218. ஓம் தாரக நாமத்தில் அன்பு கொண்ட ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

219. ஓம் மோன அமைதியுள் மனதில் கேட்கப்படும் ப்ரணவமான ஸத்-குருவுக்கு நமஸ்காரம்.

220. ஓம் திருவையாறெனும் புனிதத்தலத்திற்குப் புனிதமூட்டிய ஸத்கு-ருவுக்கு நமஸ்காரம்.

221. ஓம் உயர்ந்தெழுந்து ஆர்ப்பரிக்கும் ஸப்தஸ்வர அலைகள் நிறை ஆழியாம் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

222. ஓம் அமைதியினின்றெழும்பும் ஓங்கார நாதமான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

223. ஓம் விழையப்படவேண்டிய இசைச்செல்வமாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்

224. ஓம் அமிழ்து நிறை இசையின் ஒளிவடிவமான ஸத்குருவுக்கு நமஸ்-காரம்.

225 ஓம் ஒளிநிறை நாதவிண்மீனான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

226. ஓம் பரமாத்மாவே ஆன ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

227. ஓம் இசை, வாத்யம், கூத்து இவை மூன்றின் இருப்பிடமான ஸத்-குருவுக்கு நமஸ்காரம்.

228. ஓம் த்யாகராஜர் எனும் நாதப்ரம்மமான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

229. ஓம் பயத்தையும் நடுக்கத்தையும் போக்குகின்ற ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

230. ஓம் பாதுகாப்புநிழலருளும் ஸத்க்குருவுக்கு நமஸ்காரம்.

231. ஓம் ஸத்வம், ராஜஸம், தாமஸம் எனும் முக்குணங்கட்கு அப்பாற்-பட்ட ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

232. ஓம் ஆதி ஆத்மிகம், ஆதி தைவிகம், ஆதி பௌதிகம் எனும் முவ்-வகைத்தாபங்கள் (பிணிகள்) அற்ற ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

233. ஓம் பக்தையை விட்டுக் கணமும் அகலாத ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

234. ஓம் மூவுலகிற்கும் அப்பாற்பட்ட நாதக்கடவுளான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

235. ஓம் ஒளிமிகுந்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

236. ஓம் தயைக்குப்பாத்தி போன்ற ஸ்ரீராமனிடத்து அன்புப் பாட்டுகளுக்குப் பாத்தி போன்ற ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

237. ஓம் தவத்தில் ஸஹிப்புத்தன்மை கொண்ட கட்டுப்பாடுள்ளோரைக் காக்கும் பரமனைப்பாடுவதில் ஒன்றிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

238. ஓம் ஆதவன் குலத்துக்கணியாகிய ஸ்ரீராமனை நாள்தோறும் பாடிப்புளகாங்கிதமடைந்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

239. ஓம் தீனரைக் காக்கும் கடவுளைப் பாடிப்புகழ்ந்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

240. ஓம் தீனர் துயர்தீர்க்கும் பரமனை அல்லும் பகலும் பஜனை செய்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

241. ஓம் துன்பத்தினின்றும் துயரத்தினின்றும் காக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

242. ஓம் வெகுதூரம் பரவிய இசைப்புகழுடைய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

243. ஓம் உறுதியான பக்தருக்கே சொந்தமான ஸத்குருவுக்கு நமஸ்காரம்

244. ஓம் உள்ள, உடல் ஆரோக்யத்தை அருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

245. ஓம் தெய்வீக இசையைப் பிரஸாதமாக அருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

246. ஓம் ஊஞ்சலில் ஸ்ரீராமமூர்த்தியை எழுந்தருளுவித்து உத்ஸவம் நடத்திப் பாடிய பாடல்களில் பிரஸித்தி பெற்ற ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

247. ஓம் பலவீனத்தைப் போக்குகின்ற ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

248. ஓம் உள்ளுணர்வினில் தெள்ள ஒலித்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

249. ஓம் ஒளிரும் கண்களினால் தீக்ஷை அளிக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

250. ஓம் ஸ்வரக் கடலை ஒளிரச் செய்த / ஸ்வரார்ணவம் எனும் இசைநூலை விளக்கிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

251. ஓம் காணும் இச்சை கொண்டு கைகுவித்து வணங்குபவர் அந்தராத்மாவுக்குப் புலனாகும் ஒளியான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

252. ஓம் எளியனவும் திராட்சைச் சாறு போல் உடன் இனித்து நன்மை பயப்பனவுமான - அழகிய மங்களமான கீர்த்தனங்களை இயற்கையாய் இயற்றிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

253. ஓம் உள்ளமுருகித் தன்னையே வழிபடும் பக்த உள்ள, உடல், குரல் சோர்வினைப் போக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

254. ஓம் எதிர்மறைகளாகிய - எதிர்மறைகளினால் ஏற்படும் - துன்பத்தை நீக்குகின்ற ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

255. ஓம் எதிர்மறைகட்கப்பாற்பட்ட ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

256. ஓம் த்வாரகையை இருப்பிடமாகக் கொண்ட ஸ்ரீக்ருஷ்ணனின் விடுவிக்கும் நாமத்தின் இருப்பிடமான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

257. ஓம் இவ்வுலகும் அவ்வுலகுமாகிய இருபொருளருளும் இசை அறிவின் மூலமாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

258. ஓம் அறவுருவான ஸ்ரீராமபக்தியின் இயற்கையே உருக்கொண்ட ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

259. ஓம் உள்ளத்தை கட்டுப்படுத்தி ஒருமைப்பாட்டுடன் வழிபாட்டினால் அடையக்கூடிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

260. ஓம் முகிலொளி படைத்த வடிவுடை ஸ்ரீராமன் மேல் இசைமாரி பொழியும் ஸ்வரமுகிலான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

261. ஓம் உள்ள ஒருமைப்பாடின்றி பலனை உத்தேசித்துப் பொருட்கள் வேண்டிச் செய்யப்படும் பூஜையை இகழ்ந்த (யாரால் இகழப்பட்டதோ அந்த) ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

262. ஓம் ஸங்கீதத் தென்றலாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

263. ஓம் ஒலியுடன் ஆர்ப்பரித்தோடும் இசைப்புனிதகங்கையான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

264. ஓம் நொந்த உள்ளத்தின் ஏக்கமே தூபமாக அமைந்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

265. ஓம் உறுதி கொண்ட மனத்துடன் தன்வழி தொடர்பவருக்கு முடிவற்ற ஸங்கீதானந்தத்தை அருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

266. ஓம் தாராளமாய் அளிக்கும் குருவரருக்கு நமஸ்காரம்.

267. ஓம் துணிவை உண்டு பண்ணும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

268. ஓம் இடைவிடா இனிய கானத்தினால் அன்றுடம் வழிபடும் அவாவினை நிறைவு செய்யும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

269. ஓம் இதயத்தூய்மையுள்ள ஆத்மாவின் இசைவழிபாட்டில் இன்புறும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

270. ஓம் த்யானிக்கப்படும் குருதேவருக்கு நமஸ்காரம்.

271. ஓம் த்யானத்தில் ஆழ்ந்து ஈடுபட்டவருக்குக் கட்புலனாகும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

272. ஓம் த்யானத்தின் சிறப்பினை முழங்கிய (யாரால் த்யானத்தின்

சிறப்பு முழங்கப்பட்டதோ அந்த) ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

273. ஓம் ஸங்கீத ஸித்தியை நிச்சயம் அளிக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

274. ஓம் தனதுடற்கோயிலில் ராம ராம எனும் துல்லியமான (மணி) ஓசையை ஒலிக்கச்செய்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

275. ஓம் இளம் துளஸி இலைகள் கொண்டு ராமனை அன்புடன் ராகத்தினால் அர்ச்சித்த/ ராமனைத்தன் அன்பும் ராகமுமான இளம் துளஸி இலைகளினால் அர்ச்சித்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

276. ஓம் வெண்ணெய் போன்ற மென்மையான குரல் படைத்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

277. ஓம் மகிழ்வுற்று நாமகீர்த்தனங்களைப் பாடிய / நாமகீர்த்தனத்தில் மகிழ்ந்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

278. ஓம் நாமத்தின் பெருமை புகழப்பட்ட (நாமத்தின் பெருமை யாரால் புகழப்பட்டதோ, அந்த) ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

279. ஓம் கூத்தாடும் நாமகீர்த்தனை இன்பமாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

280. ஓம் விடுவிக்கும் இறைவன் நாமம் முழங்கப்பட்ட (யாரால் முழங்கப்பட்டதோ, அந்த) ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

281. ஓம் நாத நெறியில் முன்னோடியான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

282. ஓம் கதியற்ற நாத வித்யார்த்தியின் ஒரே அடைக்கலமான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

283. ஓம் உருவற்ற ஓங்காரத்திலே ஒளிந்திட்ட ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

284. ஓம் நாதவானில் ஒளிபரப்பிய (யாரால் நாத வானம் ஒளிபரப்பப்பட்டதோ அந்த) ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

285. ஓம் நீருண்ட மேகத்தின் கம்பீரக்குரலுடைய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

286. ஓம் ஆயிரக்கணக்கில் துதிப்பாட்டுக்கள் படைத்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

287. ஓம் புதுப்புதுப் பாட்டுமலர்களால் ராமனை அர்ச்சித்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

288. ஓம் கூத்து, பாட்டு இவ்வடிவிலுள்ள ராகதேவதையே ஆன ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

289. ஓம் கண்ணுக்கின்பமான ஸ்ரீராமனின் வடிவழகைப்பாடும் கான இன்பமே ஆன ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

290. ஓம் அன்றாட இசை வழிபாட்டில் இன்புறும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

291. ஓம் நாதோபாஸனை செய்யத்தூண்டிய (நாதோபாஸனை யாரால் தூண்டப்பட்டதோ அந்த) ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

292. ஓம் "நௌகா சரித்ரம்" எனும் இசை நாடகத்தில் ஸ்ரீக்ருஷ்ணலீலையைப் புகழ்ந்து பாடிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

293. ஓம் தக்க, அழகிய க்ருதி புஷ்ப வழிபாட்டில் மகிழ்ந்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

294. ஓம் அநுமன் நிலையாக அடைந்த, பஜனைக்கின்பமான கீர்த்தனங்களினால் ஸ்ரீராமனை ஸேவித்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

295. ஓம் அநுமன் துதிக்குப் பாத்திரமான ஸ்ரீராமனை மகிழ்விக்கும் புனிதத்துதிகள் பாடிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

296. ஓம் தூய்மையூட்டும் ஸ்ரீராம பக்தியின் உயர்வினை அறுதியிட்டுரைத்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

297. ஓம் நாமமாகிய அமுதபானத்திற்கு தாகம் கொண்ட ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

298. ஓம் நாமகீர்த்தனம் எனும் இன்பமூட்டும் அமுதைப் பருகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

299. ஓம் தூய உருக்கொண்ட ஸ்ரீராமனைக்காணும் இன்பம் பெற்ற புனித வடிவினரான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

300. ஓம் பூஜிக்கப்படவேண்டிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

301. ஓம் பக்த உயிர் மூச்சுடன் கலந்துள்ள (யாரில் பக்த உயிர் மூச்சு கலந்திருக்கிறதோ, அந்த) ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

302. ஓம் ஸ்பர்ச தீக்ஷை அளிக்கும் குருவுக்கு நமஸ்காரம்.

303. ஓம் உறுதியான தீர்மானத்துடன் மிகவும் முயலப்படும் நாதமாகிய செல்வத்தை அருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

304. ஓம் முன்னோரிடமிருந்து பெற்ற ஸ்ரீஸீதாராமமூர்த்தியை இசைமூலம் வழிபட்ட புனிதரான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

305. ஓம் புனிதமான ஸ்ரீராமநாமத்தை இனிமையாக இசைத்து போதையூட்டும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

306. ஓம் நாதோபாஸனையின் மேன்மையை வலியுறுத்திய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

307. ஓம் புத்துணர்வூட்டும் ஸ்வர அமுதைப் பொழியும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

308. ஓம் ஒவ்வொரு நொடியும் நாமஸ்மரணையில் விழிப்புடனுள்ள ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

309. ஓம் அதிகாலையில் தம்பூராவுடன் ஸுஸ்வரமான கானாஞ்ஜலியால்

மகிழும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

310. ஓம் கைகுவித்து வணங்கும் பக்த ஆத்ம உணர்வில் மலர்ந்த இப்புஷ்ப பூஜையில் மகிழும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

311. ஓம் இனிய பேச்சுடைய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

312. ஓம் விரும்பியது கொடுத்து மகிழ்வூட்டும் ஸத்குருநாதருக்கு நமஸ்காரம்.

313. ஓம் அன்புமயமான குருதேவருக்கு நமஸ்காரம்.

314. ஓம் இன்பமூட்டும் அமிழ்தாகிய மங்களமான கீர்த்தனங்களைக் கற்பிக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

315. ஓம் தெளிக்கப்பட்ட எண்ண மலர்களின் பனித்துளிகளாம் கண்ணீரில் இளகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

316. ஓம் தெளிக்கப்பட்ட தேனாகிய பக்தியுடை அன்புப் பாட்டினால் மனங்கனிந்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

317. ஓம் அன்பு கனிந்த, இனிமையே ஆன பாட்டுக்களினால் ஸ்ரீராமனைக் கட்டித் தழுவிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

318. ஓம் அன்பும் கனிவுமே உருவான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

319. ஓம் ஸ்ரீராமபாதங்களை அபிஷேகித்த புனித நீராகிய தன் இசை அமுதை (வணங்கியவர்மேல்) தெளிக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

320. ஓம் ராமபக்தியின் முழுமதியாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

321. ஓம் நாம மலர்கள் செறிந்த நாதபாரிஜாதமாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

322. ஓம் நாமத்தின் தெய்வீக நறுமணத்துடன் வீசும் நாத இன்பத்தென்றலாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

323. ஓம் பாய்ந்து நீந்தித் திளைக்கவேண்டிய தெய்வீக கான கங்கையாகிய ஸத்குருநாதருக்கு நமஸ்காரம்.

324. ஓம் **அரவரசப்படுக்கையோனின் (ஸ்ரீமந்நாராயணன்) அருகாமையிலுள்ள இசைபரசராகிய ஸ்ரீத்யாகராஜ குருநாதருக்கு மீண்டும் மீண்டும் நமஸ்காரங்கள்.**

325. ஓம் ஞானப்பழத்தை அளிக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

326. ஓம் மிகச் சிறந்த பலனாகிய மோக்ஷத்தை அடைவிக்கும் ஸங்கீதயோக மார்க்கத்தில் வழிகாட்டும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

327. ஓம் மோக்ஷபலனை அடைவிக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

328. ஓம் பரப்ரம்மமாகிய ஸ்ரீராமனை அடைந்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

329. ஓம் பக்த அன்புத்திலகம் நெற்றியில் ஒளிரும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

330. ஓம் நாமானந்தத்தினால் மலர்ந்து சிரிக்கும் தாமரைக்கண்களுடைய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

331. ஓம் அளவு கடந்த அன்பினைப் பொழியும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்

332. ஓம் உணர்ச்சிக் கண்ணீரினால் தொண்டை அடைக்கத் தழுதழுக்கும் பக்தமுன்னிலையில் தோன்றும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

333. ஓம் வானளாவிய நாதவடிவாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

334. ஓம் பீஜாக்ஷரமான ஓங்காரத்துள்ளிருக்கும் நாத சக்தியான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

335. ஓம் அறிவுயோகநெறியினைக் கடைப்பிடித்தொழுகுபவர் மனதினை நிலையாக அடைந்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

336. ஓம் மிகுந்த ஒளியுடை (வெகுதூரம் பரவிய) ஸங்கீத ஜோதியான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

337. ஓம் அறிவினைத் தட்டி எழுப்பும் குருவுக்கு நமஸ்காரம்.

338. ஓம் ப்ரம்மஞானியான (ப்ரம்மத்தை அறிந்த) ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

339. ஓம் ப்ரம்மத்தின் இயற்கையைத் தன் வடிவாகக் கொண்ட ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

340. ஓம் ப்ரம்ம முஹூர்த்தத்தில் (விடிகாலைக்கும் முன்னால்) செய்யப்படும் நாதோபாஸனையில் பிரியமுள்ள ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

341. ஓம் பக்தி நிறைந்த ஸுஸ்வரமான பாட்டில் ஆனந்திக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

342. ஓம் இறைவன் இயற்கையை இசைப்பதில் இன்புறும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

343. ஓம் இறைநினைவிலேயே ஆழ்ந்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

344. ஓம் சிதைந்த இதயத்துக்கு மருத்துவரான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

345. ஓம் பயந்த பாடகருக்கு உயிர்மூச்சளிக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

346. ஓம் பாம்பணைப் பள்ளி கொண்டோனை பஜனை செய்து ஆனந்தித்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

347. ஓம் பூமியின் புதல்வியான ஸீதையின் மணாளன் இருப்பிடமாகக் கொண்ட நன்னெஞ்சத்தை உடைய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

348. ஓம் மிக உயர்ந்த பக்தியுடைய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

349. ஓம் நோய் தீர்க்கும் தன்மை படைத்த ஸங்கீதத்திற்கு ஆசார்யனாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

350. ஓம் பைரவி ராகத்திலமைந்த அழகிய கீர்த்தனையில் கிடைத்தற்கரிய ஆதிதேவனாகிய ஸ்ரீராமனின் தர்சன பாக்யத்தைப் பாடி ஆனந்திக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

351. ஓம் இவ்வுலகின்பமும் முக்தியும் ஒருங்கே அருளும் கீர்த்தனைகளை உபதேசிக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்

352. ஓம் பௌளிராக ஆலாபனை செய்து இனிய பாட்டின்மூலம் ஸ்ரீராமனைத் திருப்பள்ளியெழுப்பும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

353. ஓம் சுழன்றுழலும் மனதின் கொடுமைக்கு முடிவான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

354. ஓம் ஐயத்தையும் குற்றத்தையும் விலக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

355. ஓம் புருவ மத்தியில் ஒருமைப்படுத்தப்பட்ட உள்நோக்குக்குப் புலனாகி ஒளிரும் நாதசக்தியான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

356. ஓம் மங்களம் செய்யும் தெய்வீகமான இன்வாக்காகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

357. ஓம் மங்களத்தின் அழகிய உருவான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

358. ஓம் மங்களத்திற்கு வழியான தெய்வீக கானாசார்யனாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

359. ஓம் மிகவும் கௌரவிக்கப்பட்ட, கான வித்தையில் மிக உயர்ந்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

360. ஓம் இனிய பாட்டுக்களைப் பிரஸாதமாக அளித்துள்ள ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

361. ஓம் கரைகாணா இன்னிசை ஆழியான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

362. ஓம் அமிழ்துசெய் நிலவை வென்ற முகமுடைய ஸ்ரீராமனைப் பாடுதலில் அமிழ்தினிமையை வென்ற ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

363. ஓம் முனிவர் வாழ்வான ஸ்ரீராமனைப் பாடுதலே வாழ்வாகக் கொண்ட முனிவரான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

364. ஓம் வாக்குத் திறனற்ற சிஷ்யையின் பஞ்சசதிநாமாவளி மூலம் அர்ச்சிக்கப்பட்ட குருவுக்கு நமஸ்காரம்.

365. ஓம் மிகமென்மையான, அமிழ்தினிய குரலே அணியாகப்பூண்ட ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

366. ஓம் கொண்டற்கருமை நிறத்தோனின் இசைக்கொண்டலான (மேகம்) ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

367. ஓம் அருள் மயமான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

368. ஓம் மோக்ஷத்துக்கு வழியான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

369. ஓம் மௌனகுருவுக்கு நமஸ்காரம்

370. ஓம் மௌனத்தினின்றெழும் நாத ஒளியான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

371. ஓம் மௌனமே ச்ருதியாக, மூச்சே இடைவிடாகானமாக அர்ப்பிக்கப்பட்ட ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

372. ஓம் எப்பொழுதும் நினைக்கப்பட்ட ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

373. ஓம் தாரக நாமமாகிய செல்வத்தைச் சேர்த்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

374. ஓம் சிறப்பைத் தரும் நாதவித்தை எனும் பாக்யத்தை அருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

375. ஓம் வேண்டப்படும் ஆசார்யதர்சனமும் உடனிருக்கும் பலனும் அருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

376. ஓம் ஒன்றிய மனமுடை சிஷ்யருக்கு உலகின் உட்பொருளை உணர்த்தும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

377. ஓம் நாமயோகம் ஒன்றிய [யாருடன் இறைவன் நாம (மனன, ஜப, கான) யோகம் ஒன்றியதோஅந்த] ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

378. ஓம் இடைவிடாது நாமப்பெருக்கிடும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

379. ஓம் யோகேச்வரனாகிய இறைவனின் நாமஜபமெனும் யோகநெறியில் வழிகாட்டும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

380. ஓம் யோகமே ஆகிய ஸங்கீதமெனும் அமிழ்தினால் பக்தருக்கு உயிரூட்டும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

381. ஓம் வேறொருவரன்றித் தன்னையே உபாஸிக்கும் பக்தரைக் காக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

382. ஓம் ரகுவரனை எண்ணற்ற க்ருதிகளில் புகழ்ந்து பாடிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

383. ஓம் அவா, வெகுளி இவை போன்ற எதிரி உணர்வுகளை அழிக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

384. ஓம் ராகமெனும் வரமருளும் (இசைவரமருளும்) ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

385. ஓம் மன்னாதி மன்னர்களிற் சிறந்த ஸ்ரீராமனைப் பாடுதலிலேயே ஈடுபட்ட த்யாகராஜ குருவரருக்கு நமஸ்காரம்.

386. ஓம் மன்னர்கட்கெல்லாம் மன்னரான ஸ்ரீராமன் புகழ்பாடும் இசை மன்னரான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

387. ஓம் ராமசந்திரன் (ராமனாகிய சந்திரன்) ஒளிவீசும் ராக அமுதக்கடலாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

388. ஓம் தாமரைக் கண்ணனைப் பாடுதலில் உருகி நனைந்த கண்களுடைய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

389. ஓம் ஸ்ரீராமமூர்த்தியைக் குலதனமாக (முன்னோர் வைத்த செல்வமாக)ப் பெற்ற ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

390. ஓம் ஒவ்வொரு மயிர்க்காலிலும் ராமபக்தி கசிகின்ற ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

391. ஓம் ராமனின் வடிவழகை ரஸித்து இன்புற்ற ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

392. ஓம் ராமபக்தியின் உயர்வை இனிதுபாடிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

393. ஓம் ஸ்ரீராமனிடம் ஆழ்ந்து வேரூன்றிய அன்பு கொண்ட, இசையில் இன்புறும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

394. ஓம் ராமனெனும் ரத்னம் பதித்த ராகமெனும் (அன்பு, குரல் இனிமை, பண்) பொன்மாலையணிந்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

395. ஓம் ராமநாமத்தைப் புகழ்ந்து பாடிய இசை இன்பமாகிய ( ராம நாமம் புகழ்ந்து பாடப்பட்ட , இசை இன்பமாகிய) ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

396. ஓம் ராகமாகிய பரிசை வாரி வழங்கும் இசைச் செல்வந்தராகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

397. ஓம் பிணி தீர்க்கும் பண்ணருவியாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

398. ஓம் மயிர்க்கூச்சுண்டுபண்ணும் குருவருக்கு நமஸ்காரம்.

399. ஓம் நேர்த்தியான, அழகு செறிந்த பதங்களால் அமைக்கப்பட்ட, ராக அமிழ்து சொட்டும் மங்களமான கீர்த்தனங்களைத் தோற்றுவித்த ஸத்குருவுக்கு நமஸ்கரரம்.

400. ஓம் சுருக்கம், சரளம், நுட்பம் இவை அமையப்பெற்ற இன்கவிப்புலமைக்குப் பெயர்பெற்ற ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

401. ஓம் ராமநாமமெனும் உயர்ந்த சந்தன ஸாரத்தால் பூசப்பட்டு மணமூட்டப்பட்ட (பூசப்பட்டு வாசனையூட்டும் ராமநாமமெனும் உயர்ந்த சந்தன ஸாரத்தினை உடைய) ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

402. ஓம் தன்னுட் கலந்துவிட்ட ஸுஸ்வரத்தையுடைய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

403. ஓம் அலைக்கப்படும் மனதை அமைதிப்படுத்தும் இசைக்குரலாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

404. ஓம் மனமாம் புஷ்பத்தினைப் பறித்து அர்ப்பிப்பவர் உள்வானில் மேலெழும்பும் ஒளிக்கதிரான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

405. ஓம் ஒளிமயமான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

406. ஓம் இவ்வுலகிற்கப்பாற்பட்ட நாத சக்தியான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

407. ஓம் அழகிய இன்னிசை ஒலியின் ஆணிவேரான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

408. ஓம் வாக்கெனும் வரமருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

409. ஓம் வாக்குக்கப்பாற்பட்ட ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

410. ஓம் வித்தையின் இருப்பிடமான ஸத்குருநாதருக்கு நமஸ்காரம்.

411. ஓம் வீணை வாசிப்பெனும் செல்வத்தை அருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

412. ஓம் வேதங்களில் புகழப்பட்ட ஸ்ரீராமனை நன்கு புகழ்ந்து பாடிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

413. ஓம் வேதஸாரமான ஸ்ரீராமநாமத்தின் நாதஸாரமான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

414. ஓம் வைதேஹியின் பாக்யமான ஸ்ரீராமனைப் பாடிய பாக்யமுள்ள ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

415. ஓம் வைபோகங்கள் கூத்தாடும் ரங்கனைப் பாடிக்கூத்தாடும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

416. ஓம் இன்னிசையைச் சூழ்ந்து வியாபிக்கும் (யாரால் ஸஸ்வர கானமானது சூழ்ந்து வியாபிக்கப்படுகிறதோ, அந்த) ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

417. ஓம் அடர்ந்த உலக வாழ்க்கைக் காட்டினைக் கடக்கச் செய்யும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

418. ஓம் சங்கு சக்கரங்களை தரித்தோனைத் தன் இதயத்தில் தரிக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

419. ஓம் சங்கரனுக்கு (சிவனுக்கு)ப் பிரியமான ஸ்ரீராமனுக்குப் பிரியமான, மங்களம் செயும் பாட்டிசைக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

420. ஓம் தாரக நாமத்தின் பெருமையை ஏத்திய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

421. ஓம் மங்களகரமான நாதசக்தியான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

422. ஓம் என்றுமிருக்கும் ஸங்கீதமெனும் வரப்ரஸாதத்தை அருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

423. ஓம் நாதோபாஸனையை போதித்த (போதிக்கப் பட்ட நாதோபாஸனை) மங்கள சரித்ரத்தை உடைய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

424. ஓம் இன்னிசை ஒலி இன்பத்தினைத் தெளிக்கும் (தெளிக்கப்பட்ட

இன்னிசை ஒலி இன்பத்தை உடைய) மிகச்சிறந்த ஆனந்த-மான கீர்த்தனைகளைச் செய்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

425. ஓம் மங்களகரமான அழகினிய குரலுடைய ஸத்குருவுக்கு நமஸ்-காரம்.

426. ஓம் மங்களம்தரும், என்றும்வாடா, மணமிக்க பாட்டுமலர்களின் மூலம் மகிழ்வூட்டும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

427. ஓம் சூன்ய வாதத்தை வேரோடு களையும் நாம கீர்த்தனத்தை போதித்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

428. ஓம் ச்ருங்காரத்தின் உச்சியான ஸ்ரீராமனைப் பாடும் ஆனந்தத்தின் உச்சியான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

429. ஓம் ஸ்ரீராமனாம் ரத்னத்தின் ஒளியைச் சென்னிமிசை கொண்ட ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

430. ஓம் மலையினை ஒத்த திடபக்தியுள்ளவருக்கு அருள் புரியும் ஸத்-குருவுக்கு நமஸ்காரம்.

431. ஓம் தூய்மைப் படுத்தும் ஸங்கீதகங்கையாகிய ஸத்குருநாதருக்கு நமஸ்காரம்.

432. ஓம் **ஸ்ரீத்யாகராஜஸ்வாமி எனும் தெய்வத்துக்கு மீண்டும் மீண்டும் நமஸ்காரங்கள்.**

433. ஓம் கருநிற அழகிய உருக்கொண்டோனைப் பாடும் அழகிய ஏழு இன்னிசை ஒலிகளின் (ஸப்தஸ்வரங்களின்) உருவான ஸத்கு-ருவுக்கு நமஸ்காரம்.

435. ஓம் நம்பிக்கையுடன் தன்னை நினைந்தேங்குபவரைக் காக்கும் ஸத்-குருவுக்கு நமஸ்காரம்.

435. ஓம் அக்கறையுடன் பாடுபடும் சிஷ்ய உள்ளுள்ள அளவற்ற ஆத்ம சக்தி எனும் விளக்கினைத் தூண்டி நன்கு ஒளிரச்செய்யும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

436. ஓம் புகழ் அளிக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

437. ஓம் அலுத்த உள்ளத்துக்குப் புத்துயிரூட்டும் இசை அமுதைப் பொழியும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

438. ஓம் தன்னை வந்தடைந்த, தன்னையே பூஜிக்கும் பக்தரைக் காக்-கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

439. ஓம் கடைத்தேற்றும் ஸ்ரீராமமகிமைகட்கிருப்பிடமாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்

440. ஓம் ச்ருதி சுத்தமான ஆத்மானந்தமான கானத்தில் புலனாகும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

441. ஓம் நாதமெனும் தெய்வீக சக்தியான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

442. ஓம் மிக்க சிறப்பினை அளிக்கும் நாதாசார்யனான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

443. ஓம் செவியினால் பருகிட வேண்டிய அமுதக்குரலுடைய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

444. ஓம் மனமுவந்த பணியினால் ஸ்ரீராமனை மகிழ்வித்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

445. ஓம் மென்மையான, பிசிரற்ற குரலுடைய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

446. ஓம் ஸங்கீதச் சூழலை ஊடுருவிப் பரந்த (யாரால் ஸங்கீதச் சூழல் ஊடுருவி வியாபிக்கப்பட்டதோ, அந்த) ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

447. ஓம் ஸங்கீதோபாஸனையை மெச்சிய (யாரால் ஸங்கீதோபாஸனை மெச்சப்பட்டதோ, அந்த) ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

448. ஓம் தன் பற்றினை இறுகப் பற்றிக்கொண்ட உண்மை பக்தரை ஆரத்தழுவிக்கொள்ளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

449. ஓம் புகழ் பெற்ற இசை அரசராகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

450. ஓம் சிலேடையில் திறனுள்ள மிகச் சிறந்த கவியாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

451. ஓம் புகழ்படைத்த, நாதச் சிறப்பான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

452. ஓம் ஏத்தித்துதிக்க வேண்டிய, இசைஉருவான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

453. ஓம் ஏத்தித்துதிக்கப்பட்ட குருவருக்கு நமஸ்காரம்.

454. ஓம் ஸுஸ்வரமாகிய காற்றை சுவாசித்த (யாரால் ஸுஸ்வரமாகிய காற்று சுவாசிக்கப்பட்டதோ அந்த) / உள்ளிழுக்கப்பட்ட ஸுஸ்வரமாகிய காற்றான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

455. ஓம் சலனமற்ற ஸுஸ்வர ஏரியான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

456. ஓம் மங்களத்தைக் கொடுக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

457. ஓம் ஷட்ஜமாகிய ஆதார ச்ருதியினின்றெழும்பும் ஸங்கீதப் பெருக்கான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

458. ஓம் ஷாடவ, ஔடவ, ஸம்பூர்ண ராகங்களின் ஸாரம் ஒருருவான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

459. ஓம் பதினாறு வித உபசாரங்களுடன் ஸ்ரீராமனுடைய அன்றாட இசை வழிபாட்டில் ஈடுபட்ட ஒப்பற்ற பரம பாகவதரான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

460. ஓம் ஸங்கீதப்ரியரான ஸத்குருநாதருக்கு நமஸ்காரம்.

461. ஓம் ஸங்கீதத்தின் உறைவிடமான / ஸங்கீதத்தில் உறையும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

462. ஓம் எங்கும் நிறைந்துள்ள உண்மையாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

463. ஓம் எல்லாவற்றுக்கும் ஸாரமான ராம நாம மகிமையையும் அதிலுள்ள ரஹஸ்யத்தையும் உபதேசிக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

464. ஓம் தனதன்புப் பிணைப்பில் கட்டுண்ட ஸ்ரீராமனையுடைய (யாருடைய அன்புப்பிணைப்பில் ஸ்ரீராமன் கட்டுண்டானோ, அந்த) ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

465. ஓம் ஸீதாராமன் எப்போதும் வசிக்கும் கணக்கற்ற இனிய பாட்டுக்களைப் படைத்த / இனிய கீர்த்தனைகள் என்ற வலையில் ஸீதாராமனை எப்போதும் வசிக்கச்செய்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

466. ஓம் அழகிய, இனிய ஏழு ஸ்வரங்களுள்ளிருக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

467. ஓம் ஸுஸ்வரமெனும் அம்ருதரஸம் நிறைந்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

468. ஓம் ஸுஸ்வர அம்ருதமெனும் மிகச் சிறந்த மருந்தாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

469. ஓம் இன்னொலி வானில் ஒளிரும் மின்னலாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

470. ஓம் ஸுஸ்வரக்கானகத்தில் உறையும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

471. ஓம் ஸுஸ்வர வித்தையில் மிகுந்த ஈடுபாடுள்ள ஒருவரால் வேண்டி தேடப்படும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

472. ஓம் ஸுஸ்வர வித்தை வேண்டுபவரின் உள்ள வானில் உதய ஸூர்யனாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

473. ஓம் ஸூத்ரதாரியான ஸ்ரீராமனைப் பாடுவதிலே நிறைந்த மனதுடைய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

474. ஓம் மங்களகரமான அழகிய ஆயிரக்கணக்கான கீர்த்தனைகளை ஸ்ரீராம அர்ச்சனைக்காக ச்ருஷ்டித்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

475. ஓம் இன்கவித்திறன் வந்தடைந்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

476. ஓம் அன்புடை பக்தியின் உருவாக ஸ்ரீராமனை ஸேவித்த (ஸ்ரீராமன் ஸேவிக்கப்பட்ட அன்புடைய பக்தியின் உருவாகிய) ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

477. ஓம் ராமராம எனும் இன்னொலியுடனிணைந்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

478. ஓம் ஸௌமித்ரி (லக்ஷ்மணன்) உடன்கூடிய ஸ்ரீராமனின் யாக ரக்ஷணத்தை இனிய பாட்டின் மூலம் நேரில் காண்பிக்கும்

ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

479. ஓம் துதிப்பாட்டுக்களின் கூட்டங்களினால் ஸ்ரீராமனை அழகுபடுத்திய (யாருடைய துதிப்பாட்டுக் கூட்டங்களினால் ஸ்ரீராமன் அழகுபடுத்தப்பட்டானோ, அந்த) ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

480. ஓம் இத்துதி புஷ்பமாலைகளினால் அலங்கரிக்கப்பட்ட ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

481. ஓம் ஸ்ரீராமன் நினைவிலேயே நிலைத்து நின்ற ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

482. ஓம் பக்தநினைவில் நிலைத்துள்ள (யாரிடம் பக்தநினைவு நிலைத்துள்ளதோ அந்த) ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

483. ஓம் நிலைத்த, ஆழ்ந்த நோக்கினால் ஸங்கீத சாஸ்திரத்தின் அறிவும் தன்னுருவடையும் பாக்யமும் அருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

484. ஓம் ராமகான கங்கையில் நீராடிய (யாரால் ராமகான கங்கை நீராடப்பட்டதோ அந்த) ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

485. ஓம் தன் பற்றினை இறுகப்பற்றிய பக்த அன்பெனும் சந்தனஸாரம் பூசப்பெற்ற ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

486. ஓம் அன்புநிறைந்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

487. ஓம் தெளிவான பொருளுடன் தத்துவங்கள் நிரம்பிய பாட்டுக்களின் மூலம் ஞானத்தைத் தட்டி எழுப்பும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

488. ஓம் (நாதத்துக்காக) ஏங்கும் ஆத்மாவுக்கு நாதவரமருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

489. ஓம் ஆயிரமாயிரம் சூர்யர்களின் ஒளியுடன் ஒளிரும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

490. ஓம் ராமநாமமாகிய சந்திரனும் ஸுஸ்வரங்களாகிய தாரகைகளும் ஒளிரும் ஸங்கீதவானமாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

491. ஓம் ஒளிரும் நாமகானானந்தமான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

492. ஓம் கவிதை உள்ளுணர்வை உண்டாக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

493. ஓம் அழகுறு ரகுராமனை ஸ்மரித்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

494. ஓம் மலர்ந்து சிரிக்கும் நாதமலரின் நாமநறுமணமாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

495. ஓம் இன்பந்தரும் இன்னிசை இறைவனாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

496. ஓம் நினைத்தமாத்திரம் முன்தோன்றி ஒளிரும் ஸ்த்குருவுக்கு நமஸ்காரம்.

497. ஓம் தெள்ளத்தெளிந்த தெய்வீக ஸங்கீத தாமரைக்குளமாகிய ஸத்-குருவுக்கு நமஸ்காரம்.

498. ஓம் ஸ்வர வித்தைக் கடலாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

499. ஓம் ஸ்வர சுத்தமருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

500. ஓம் ஸ்வதந்த்ரத்தை அருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

501. ஓம் ஸ்வரம், அக்ஷரம் கொண்ட இக்கதம்ப மலர்களின் நறுமண-மான ஸத்குருவுக்கு நமஸ்காரம் / ஸ்வரம் அக்ஷரம் கொண்ட இக்கதம்ப மலர்களில் வசிக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

502. ஓம் பக்த உள்மனப்பூர்வ எண்ணங்களும் உணர்வுகளுமான இந்-நைவேத்யத்தைச் சுவைத்து ஆனந்திக்கும் ஸத்குருவுக்கு நமஸ்-காரம்.

503. ஓம் நிஜபக்த கானாஞ்ஜலியை ஆனந்தித்து ஸ்வீகரிக்கும் (ஏற்றுக்-கொள்ளும்) ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

504. ஓம் தன்னுடையவே ஆன, தன்னையே உபாஸிக்கும் பக்தையை முடிவற்ற ஓங்கார நாதரூபத்தில் சூழும் ஸத்குருவுக்கு நமஸ்-காரம்.

505. ஓம் ஹரிநாம ஸங்கீர்த்தனம் செய்யும் வசீகரக்குரலுடைய ஸத்-குருவுக்கு நமஸ்காரம்.

506. ஓம் ஹரிநாம ஸங்கீர்த்தனத்தின் உயர்வை முழங்கிய ஸத்குரு-வுக்கு நமஸ்காரம்.

507. ஓம் ஹரிபக்தி சொட்டும் இனிய கீர்த்தனங்களை போதித்த, புகழ்-பெற்ற ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

508. ஓம் ஹாஸ்யரஸம் (நகைச்சுவை) நிரம்பிய நிந்தாஸ்துதி மன்ன-னாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

509. ஓம் ஹிதோபதேச ஸாரமான அழகிய கீர்த்தனங்களை அருளிச்-செய்துள்ள ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

510. ஓம் சக்தி அற்ற, ஒருமுனைப்பட்ட பக்தரின் ஒரே பாதுகாப்பான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

511. ஓம் ஆத்மாவுட்கலந்திட்ட ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

512. ஓம் இதயபூர்வமான பக்தி கொண்ட இப்புஷ்பாஞ்ஜலியில் மகிழ்-வுறும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

513. ஓம் புத்துணர்வளிக்கும தெய்வீகக் குரலுடைய /புத்துணர்ச்சியூட்-டும் குளிர்ந்த தெய்வீக மூச்சுக்காற்றாகிய ஸத்குருவுக்கு நமஸ்-காரம்.

514. ஓம் தன் அன்பாலும் பாட்டாலும், பக்தரை மகிழ்விக்கும் / பக்-தரை மகிழ்விக்கும், அன்பினாலுதித்த பாட்டுக்கள் படைத்த

பக்த அன்புப்பாட்டினால் மகிழ்ந்த (யாரால் பக்த அன்புப் பாட்டு மகிழப்பட்டதோ அந்த) ஸத்குருவுக்கு நமஸ்-காரம்.

515. ஓம் இதயமாம் பொற்கிண்ணம் நிறைய பக்தித்தேன் அர்ப்பிக்கப்-பட்ட ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

516. ஓம் ஸுஸ்வர ஆழியினைத் தங்கமயமாக்கும் இளங்கதிரவனாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

517. ஓம் ஸ்ரீராமனாம் இளங்கதிரோனால் பொன்னிறமாக்கப்பட்ட இன்-னிசை ஆழியான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

518. ஓம் இன்பமான, இனியதான, சுகம் தரும், எழிலுடை எல்லாவற்-றுக்கும் உட்கருவான குருநாதருக்கு நமஸ்காரம்.

519. ஓம் பக்த உள்ளுள் முழுதும் ஆழ்ந்து பரந்திருக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

520. ஓம் பக்த ஆழ் மனத்துள் மலர்ந்த இவ்வன்பு நறுமணப்புஷ்பங்கள் அர்ப்பிக்கப்பட்ட ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

521. ஓம் பக்திபுஷ்பத்தின் ஸங்கீதநறுமணமான ஸத்குருவுக்கு நமஸ்கா-ரம்.

522. ஓம் பக்தியின் நறுமணமும் கானமாகிய இனிய தேனும் பொருந்திய சலனமற்ற சித்த புஷ்பத்தால் அர்ச்சிக்கப்பட்ட ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

523. ஓம் பக்த இதயக்குகையில் தெள்ளென ஒளிரும் நாதத்தோன்றலான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

524. ஓம் நாதப்பொன்னொளியான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

525. ஓம் தனிமையிலேயே உணர்ந்தனுபவிக்க வேண்டிய, தானே ஒளி-ரும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

526. ஓம் இன்னொலியின் மூலமான அடர்ந்தாழ் அமைதியான ஸத்-குருவுக்கு நமஸ்காரம்.

527. ஓம் நாதப்ரம்மத்தின் நுண்ணுருவான ப்ராண சக்தியாகிய ஸத்-குருவுக்கு நமஸ்காரம்.

528. ஓம் தெளிந்த அமைதியான மனதில் சுடர்விடும் நாதப்ரம்மமான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

529. ஓம் நாதத்தின் உட்கருவான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

530. ஓம் நாதத்தால் சூழப்பட்ட ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

531. ஓம் நாதத்தின் உள்ளுள்ள / நாதத்தின் ஆழ் அமைதியான ஸத்-குருவுக்கு நமஸ்காரம்.

532. ஓம் நாதத்தின் கோவிலான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

533. ஓம் நாதக்கோவிலின் ஞானவிளக்கான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

534. ஓம் நாதக்கோவிலாம் இதயத்தினுள் தெய்வமான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

535. ஓம் நாத ஒளிச்சுடரான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

5?6. ஓம் நாதத்தினால் அர்ச்சிக்கப்பட்ட ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

537. ஓம் நாதத்தின் நிறைவான/நாதப் பேரின்பமான ஸத்குருவுக்கு நமஸ்-காரம்.

538. ஓம் நாதமெனும் தெய்வீக சக்தியான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

539. ஓம் நாதோபாஸகரைத் தன்னோடு ஒன்றுக்கிக் கொள்ளும் மேம்-பட்ட நாதகுருவுக்கு அனேக நமஸ்காரங்கள்.

540. ஓம் நாதப்ரம்மானந்தமாகிய ஸத்குரு ஸ்ரீத்யாகராஜஸ்வாமிக்கு மீண்டும் மீண்டும் நமஸ்காரங்கள்.

ஓம்

ஸ்ரீராமஜயம்

# ஸத்குரு ஸ்ரீத்யாகப்ரம்ம

# ஸஹஸ்ர நாமாவளீ

ஓம்

1. ஓம் ஸங்கீதாலயத்தில் உறையும் தெய்வமான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.
2. ஓம் ஓங்காரத்தின் உருவமான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.
3. ஓம் நாதோபாஸனைக்கான ஏக்கம் கொழுந்து விட்டெரியும் விளக்காக உள்ள ஸன்னிதியில் கடவுளான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.
4. ஓம் பக்தையின் கண்ணீரினால் நீராட்டப்பட்ட புனித உருவான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.
5. ஓம் உள்ளார்ந்த அன்புள்ள பக்தையின் ஆழ்ந்த உணர்வே ஆடையாக அமையப்பெற்ற ஸத்குருவுக்கு நமஸ்காரம்.
6. ஓம் ஸுஸ்வரத்தின் நறுமணம் கொண்ட / ஸுஸ்வரத்தின் இனிமையே குரலான / ஸுஸ்வரத்தில் ஆழ்ந்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.
7. ஓம் நாத மலரை அணியாகப் பூண்ட ஸத்குருவுக்கு நமஸ்காரம்
8. ஓம் நாம மலர்களினால் பூஜிக்கப்பட்ட ஸத்குருவுக்கு நமஸ்காரம்.
9. ஓம் த்யானிக்கும் பக்தையின் உயிர்மூச்சினால் அர்ச்சிக்கப்பட்ட ஸத்குருவுக்கு நமஸ்காரம்.
10. ஓம் ஸஹஸ்ரநாமமெனும் நறுமண புஷ்பாஞ்ஜலி ஸமர்ப்பிக்கப்பட்ட ஸத்குருவுக்கு நமஸ்காரம்.
11. ஓம் இனிமையாக இசைக்கும் தாகம் எனும் ஆத்ம தாபமே தூபமாக அர்ப்பிக்கப்பட்ட ஸத்குருவுக்கு நமஸ்காரம்.
12. ஓம் பக்தையின் ஆத்ம நிவேதனத்துடன் கை குவித்து வணங்கப்பட்ட ஸத்குருவுக்கு நமஸ்காரம்.
13. ஓம் கன, நய ராகங்களைப் பாடுவதாகிய தீபாராதனையில் ஒளிரும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.
14. ஓம் இனிய கானமே ஜண ஜணவென ஒலிக்கும் மணியாக, இதயத்தில் ஒளிரும் அன்பே கர்ப்பூரமாக நீராஜனம் அமைந்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.
15. ஓம் ஆத்மானந்தமான தன் நாதவடிவைக் காணும் இன்பத்தை ப்ரஸாதமாக அருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

16. ஓம் நாதப்ரம்மானந்தத்தையே தன் வடிவாகக் கொண்ட ஸத்குரு-வுக்கு நமஸ்காரம்.

17. ஓம் நாதத்தின் களியாட்டத்தின் வடிவான / நாத இன்பத்துடன் கூத்தாடும் வடிவான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

18. ஓம் வழிபடும் பக்தையின் உள்ள அரங்கத்தில் ஆடுகின்ற ஸுஸ்வர தேவதையான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

19. ஓம் ஸ, ரி, க, ம, ப, த, நி என்னும் ஏழு ஸ்வரங்கள் இனிய ஒலியுடன் ஆடுகின்ற ஒளியாகிய ஸங்கீத தேவதையான ஸத்-குருவுக்கு நமஸ்காரம்.

20. ஓம் நாதத்தை வழிபடும் பக்த இதயம், எண்ணம், குரல், நாவு இவற்றிலமர்ந்த நாத தேவதையான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

21. ஓம் பிரகாசிக்கும் ஏழு ஸ்வரங்களின் ஒளிவட்டத்தால் சூழப்பட்ட ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

22. ஓம் இசை இன்பம் ஒளிரும் திருமுகத்தையுடைய ஸத்குருவுக்கு நமஸ்-காரம்.

23. ஓம் நாதவடிவமான ஸ்ரீராமனைத் திலகமாக அணிந்த அழகிய நெற்றியுடைய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

24. ஓம் அறிவு நெருப்பின் பொறிபறக்கும், ஒளியை உமிழும் கண்களு-டைய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

25. ஓம் ஸுஸ்வரத்தின் நறுமணத்தை முகர்ந்து இன்புறும் ஸத்குரு-வுக்கு நமஸ்காரம்.

26. ஓம் ஸப்தஸ்வர மணிகளால் அலங்கரிக்கப்பட்ட கோதண்டத்தைக் கையிலேந்திய ஸ்ரீராமனின் திருநாமத்தை உதடுகள் உச்சரிக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

27. ஓம் மங்களவாணி மகிழ்ந்து ஆடும் தேன் நாவினையுடைய ஸத்-குருவுக்கு நமஸ்காரம்

28. ஓம் அமிழ்துடன் போட்டியிடும் வகையில் கனநயராகங்களை இசைக்கும் இனிய குரலுடைய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

29. ஓம் ஸ்வரம் (இனிய ஒலி), அக்ஷரம் (எழுத்து) இவற்றாலான மாலை-யினால் கழுத்தில் அலங்கரிக்கப்பட்ட ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

30. ஓம் ஸ்வரங்களாலான அக்ஷமாலை மார்பில் அழகுற விளங்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

31. ஓம் தம்புரா, கைத்தாளம் இவற்றை இனிமையாக ஒலிக்கும் கரத்-தாமரைகட்கு நமஸ்காரம்.

32. ஓம் நாபி, இதயம், தொண்டை, நாவு, மூக்கு இவற்றிலிருந்து ஸஞ்-சரிக்கும் நாதத்தின் இயல்பான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

33. ஓம் நாதத்தை உபாஸிப்பவரால் ஸுஸ்வர புஷ்பத்தால் வழிபடப்-படும் திருவடித்தாமரைகட்கு நமஸ்காரம்.

34. ஓம் ஓங்காரச் சுழலின் உட்கருவான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

35. ஓம் ஓங்காரத்தில் ஒளிந்துள்ள ஒலியின் மூலமான அமைதியாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

36. ஓம் அமைதியில் வேரூன்றிய தெய்வீகமான ப்ரணவநாதத்தை உருவாகக் கொண்ட ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

37. ஓம் ஓங்காரத்தின் உள்ளுள்ள அழகிய இனிய நாதத்தின் உருவமாக பக்தையின் உள்ளுள் வியாபித்திருக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

38. ஓம் ஸுநாதத்தை (இனிய ஒலியை)த் தன்னுள் அடக்கிய பேரின்பப் பேரமைதியான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

39. ஓம் ஸுஸ்வரத்தில் (இனிய ஒலியில்) நிலைத்திருக்கும் நுண்ணுருவான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

40. ஓம் செவிக்கினிய இனிய ஒலி வடிவில் எங்கும் வியாபித்துள்ள ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

41. ஓம் வீணையின் இனிய ஒலியில் இருக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

42. ஓம் எழுத்துக்களிலும் இனிய இசை ஒலியிலும் ஸஞ்சரிக்கும் இசைவாணியே ஆன / எழுத்துக்களிலும் இனிய ஒலியிலும் ஸஞ்சரிக்கும் இசையின் குரலான ஸத்குருவுக்கு நமஸ்காரம். எழுத்துக்களிலும் இன்னிசை ஒலியிலும் ஸஞ்சரிக்கும் இவ்விசைப்புகழே ஆன ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

43. ஓம் அமைதியினின்றெழும் இனிய ஒலியின் வடிவான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

44. ஓம் அமைதியாம் ச்ருதியுடன்கூடிய, இனிய ரீங்காரத்துடன் பாடும் மென்இசையின் இன்னொலியான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

45. ஓம் ஓங்கார ச்ருதியுடன் கூடிய இனிய சக்தி வாய்ந்த இசையின் உருவான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

46. ஓம் ஒலி இன்பமாகிய பரந்த வெட்ட வெளியான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

47. ஓம் ஆழமான நாதப்பெருங்கடலான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

48. ஓம் கரையில்லா நாதக்கடலின் எல்லையான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

49. ஓம் அமைதியாம் ஆழியினின்றெழும்பும் மிகமென்மையான இன்னொலி அலையாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

50. ஓம் ஸ்ரீராமநாம ச்ருதியுடன் பாடும் அலைகள் நிறைந்த நாதக்கடலான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

51. ஓம் ஸ்ரீராமநாமத்திரைகள் உலக வாழ்வாகும் கரையைத் தாக்கும் ஸங்கீதானந்தக் கடலான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

52. ஓம் அமிழ்த மயமான ஸுஸ்வர ஆழியின் எல்லைவானில் உதித்த வெள்ளி நிலவான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

53. ஓம் இசைக்கடலை ஒளிரச்செய்யும் பனிக்கதிர்மதியான ஸத்குரு-வுக்கு நமஸ்காரம்.

54. ஓம் இசைப்பாற்கடலில் இன்ப அலைகளை எழுப்பும் தண்ணிறைம-தியான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

55. ஓம் ஸுஸ்வர அமுதக் கடலின் ஆனந்த அலைகள் வெள்ளியென மின்ன ஒளியூட்டும் சரத்காலச் சந்திரனான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

56. ஓம் கடற்கரை வெண்ணிலவொளியின் இன்பமூட்டும் இசை நில-வான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

57. ஓம் இசை இன்பமாகிய அமுதைப் பொழியும் இனியகான நில-வான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

58. ஓம் இசைக்கடலின் கரையில் வீசும் இன்மணமிக்க தண்காற்றாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

59. ஓம் அம்ருதத்தன்மை நிறைந்த அழியா இசை இன்ப உணர்வே-யான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

60. ஓம் கனிவுக்கொண்டலினின்றமிழ்தைத் தெளிக்கும் சொற்சிறப்புள்ள ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

61. ஓம் இன்னிசை மின்னல் மேகமாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

62. ஓம் ஆழ்ந்து கம்பீரமாக ஒலிக்கும் நாதமுகிலாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

63. ஓம் தொடர்ச்சியான தெய்வீக இசை மழைபொழியும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

64. ஓம் இசைவானில் செஞ்சூரிய உதயமாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

65. ஓம் இசை வானத்தில் பல பண்களால் வண்ணக் கோலமிட்டு அழ-கூட்டும் பொற்சூரியனாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

66. ஓம் ஸுஸ்வரக் கடலினை ஒளியுறச் செய்யும் ஆதவனாகிய ஸத்-குருவுக்கு நமஸ்காரம்.

67. ஓம் விரிந்து பரந்த கானவெளியில் தகதகத்து ப்ரகாசிக்கும பகல-வனாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

68. ஓம் வறண்ட பாலையாகிய உள்ளத்தை ஸங்கீத ஓடையாக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

69. ஓம் ஸங்கீத தாகத்தைத் தணிக்கும் நீரூற்றாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

70. ஓம் ஸங்கீதமாகிய நறுமலர்ப் பொழிலில் வீசும் மணமிக்க ஸுஸ்-வர இளந்தென்றலாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

71. ஓம் செவிக்கினிய இசை நறுமணம் பரப்பும் மலய மாருதமான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

72. ஓம் இசையெனும் கொடிப்பந்தலில் ரீங்காரமிடும் தேன்வண்டாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

73. ஓம் இசைத்தோப்பிலே உறையும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

74. ஓம் கானகங்கையின் போக்காகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

75. ஓம் கானஅருவியின் நாமத்தேன்வீழ்ச்சியான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

76. ஓம் இசைச்சோலையில் இனிமையாகக் கூவின இளவேனிற் குயிலான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

77. ஓம் இசைஞான நதியின் பக்தி மூலமான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

78. ஓம் இசைவானிலுதித்த தெய்வமான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

79. ஓம் பண்ணெனும் பனிமலையை வெள்ளிமயமாக்கும் ராமனாகிய சந்திரனின் கதிரான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

80. ஓம் ராமனாம் ஆதவன் செந்நிறமூட்டிய இன்னொலி இமய உச்சியாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

81. ஓம் ராமனாம் ஏரியில் பிரதிபலித்த ஸங்கீத உருவமாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

82. ஓம் ஸங்கீத ஏரியில் பிரதிபலித்த ஸ்ரீராமமூர்த்தியே ஆன ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

83. ஓம் இடத்திலும் காலத்திலும் எங்கும் பரந்திருக்கும் நாத ஒளியான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

84. ஓம் ஆழிமுதல் வானம் வரை எட்டுகின்ற ஸங்கீத உருவமாகிற ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

85. ஓம் மலைமன்னனாகிய இமயத்தைக் காட்டிலும் உயர்ந்த இசைமன்னனான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

86. ஓம் பக்தியாகிய இமயத்திற் பிறந்த தெய்வீக ஸங்கீதமெனும் ஞான கங்கையான குருநாதருக்கு நமஸ்காரம்.

87. ஓம் நினைத்த மாத்திரத்தில் முக்தி அருளும் இசைகங்கையின் உற்பத்தி ஸ்தானமாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

88. ஓம் அமிழ்பவரை மகிழ்விக்கும் ச்ருதிகங்கை ப்ரவாஹமான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

89. ஓம் அலுத்த உள்ளத்துக்கும் உடலுக்கும் மருந்தாகும் தெய்வீகக் கீர்த்தனைகங்கையான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

90. ஓம் சினம், கவலை, பாபம் இவற்றை விரட்டித்தூய்மையாக்கும் புனித கீதகங்கையான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

91. ஓம் உள்ளத்தைத் தூய்மைப்படுத்தும் தெய்வீகமான சொற்கங்கை-யின் பிரவாகமான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

92. ஓம் ஞானச் செம்மையினால் பண்ணெனும் வண்ண மயமாக்கப்பட்ட இசைகங்கை வெள்ளமாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

93. ஓம் கடவுளின் வடிவமான கங்கையின் புனிதத்திற்கு மற்றோர் உரு-வான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

94. ஓம் அந்தி நேரத்திலே அழகுறு கங்கா தீரத்திலே அடர்ந்த அமை-தியான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

95. ஓம் கங்கை நீராடுதலின் பலனை அளிக்கும் ஸ்ரீராமத்யானத்தை விதித்துரைக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

96. ஓம் ப்ரணவவானிலுதித்து திருவையாற்றில் விளங்கி இசையை ஆராதிக்கும் இதய மலரின் அன்புத் தேன்கடலில் கலந்து-விட்ட ஸங்கீத தேவகங்கையான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

97. ஓம் இன்னிசைமயவாழ்வுக்கு ஆதார ச்ருதியான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

98. ஓம் இன்னிசைக் கற்பகத்தருவான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

99. ஓம் இன்னிசைமலரின் இனிய பக்திநறுமணமான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

100. ஓம் இசை ஞானப்பழமான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

101. ஓம் இன்னிசையின் இனிமையான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

102. ஓம் முழுவதும் இனிமையே ஆன ஸத்குருவுக்கு நயஸ்காரம்.

103. ஓம் இனிய வரமருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

104. ஓம் இயற்கையான இன்னிசையை அருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

105. ஓம் இன்னிசையை ஆராதிப்பவருக்கு முடிவில்லா இன்பமும் மங்க-ளமும் முழுமையாக அருளும் ஸ்த்குருவுக்கு நமஸ்காரம்.

106. ஓம் இனிய இசை ஒலியின் இருப்பிடமான/இனிய இசை ஒலியை இருப்பிடமாகக் கொண்ட ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

107. ஓம் இன்னிசையின் மறு பெயரான ஸத்குருநாதருக்கு நமஸ்காரம்.

108. ஓம் ஸத்குரு ஸ்ரீத்யாகராஜஸ்வாமிக்கு மீண்டும் மீண்டும் நமஸ்காரம்.

109. ஓம். புன்னகைக்கும் ஸங்கீத .தேவனாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

110. ஓம் எப்பொழுதும் இன்பமாகிய இசையின் இயற்கையான ஸத்கு-ருவுக்கு நமஸ்காரம்.

111. ஓம் இசை உள்ளிருக்கும் சக்தியின் ஸாரமான் ஸத்குருவுக்கு நமஸ்-காரம்.

112. ஓம் எப்பொழுதுமிருக்கும் இசை இன்பத்தை உண்டாக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

113. ஓம் உடன் உயிர்விக்கும் இசை அருமருந்தான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

114. ஓம் இசைமலையின் உயர் உச்சியான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

115. ஓம் இசைமலையின் உயர் உச்சிக்கு ஒளியூட்டும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்

116. ஓம் மின்னலை ஒத்த இசைப்பேரொளியான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

117. ஓம் பொற்சிறகுடை இசைஅன்னமாம் பரம்பொருளாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

118. ஓம் அடர்ந்த நறுமணங்கொண்ட தெய்வீகத்தாமரையாம் ஸங்கீத ப்ரம்மகமலமாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

119. ஓம் இசைமலையுச்சியினின்றிறங்கிய ஞானகங்கையான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

120. ஓம் தொன்றுதொட்டுள்ள பரப்ரம்மத்தை குணங்கள் கொண்டதாய் வழிபடும் இசை மார்க்கத்தை நன்கறிவிக்கும் பொருட்டு அவதரித்த பரம தூயரான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

121. ஓம் முழுமையான அவதாரமாகிய ஸ்ரீராமனின் த்யானத்திலும் நாம பஜனையிலும் மங்கள குணங்களைப் பாடுவதிலும் நிறைவு பெற்ற நோக்கத்தை உடைய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

122. ஓம் நாத உருவான ஸ்ரீராமனை ஏத்திப்பாடிய நாத அவதாரமான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

123. ஓம் ஸ்ரீராமனாம் மலையினின்றெழும்பிய தேவகான தெய்வீக கங்கையான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

124. ஓம் ஸ்ரீராம பக்தியை மூலமாகக் கொண்ட நாதமாம் வான்வெளி கங்கையாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

125. ஓம் ஸ்ரீராம பக்தி அலைமோதும் ஸங்கீத ஆறாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

126. ஓம் ஸ்ரீராமனது புனித நாமத்தின் கானவெள்ளமாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

127. ஓம் ஸ்ரீராம நாமாவளி மின்னும் நாதமழை முகிலாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

128. ஓம் ஸ்ரீராம நாமம் தனை முழங்கும் மேகக்குரலுடைய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

129. ஓம் ஸ்ரீராம நாமத்தை தேனினுமினிய கானமாரியாய்ப் பொழிந்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

130. ஓம் ஸ்ரீராம பக்தி பெருக்கெடுத்தோடும் கானாம்ருதகங்கையான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

131. ஓம் ஸ்ரீராம நாமத்தை இடைவிடாது இசைத்தேன் கங்கையாகப் பெருக்கிடச்செய்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

132. ஓம் ஸ்ரீராம அம்ருதம் பெருக்கிடும் கானாம்ருதப்பெருக்காகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

133. ஓம் ஸ்ரீராமக்கடலில் ஸங்கமித்த ஸங்கீத கங்கையாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

134. ஓம் ஸ்ரீராமன் பள்ளிகொள்ளும் இசைப்பாற்கடலாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

135. ஓம் ஸ்ரீராம பக்தியெனும் கடலின் இசை அலையாகிய/ஸ்ரீராம பக்தி எனும் கதிரோனின் இசைக்கதிராகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்

136. ஓம் ஸ்ரீராமனின் சிறப்பாம் மஞ்சுக்கூட்டங்கள் மிதக்கும் இசைவானவெளியாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

137. ஓம் ஸ்ரீராம பக்தி எனும் ஏரியில் மணம் வீசிய ஸங்கீதத்தாமரையாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

138. ஓம் ஸ்ரீராம நாமமெனும் தாமரையை மொய்க்கும் வண்டாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

139. ஓம் ஸ்ரீராமனாகிய வண்டு சுற்றி வரும் இசைத்தாமரையாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

140. ஓம் ஸ்ரீராம நாமத்தேனுடை நாதமலராகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

141. ஓம் ஸ்ரீராம பக்தியாகிய தேன் மணத்துடன் நாமத்தேனொழுகும் ஸுஸ்வர மலராகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

142. ஓம் ஸ்ரீராமத்துதிப் பாட்டுக்கள் பீறிட்டுப் பொழிந்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

143. ஓம் ஸ்ரீராமனின் பேச்சினிமையைப் புகழ்ந்து பாடிய தேனினிய குரல் படைத்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

144. ஓம் ஸ்ரீராம தாரக நாமத்தினை நாதத்தேன் குரலில் முழங்கிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

145. ஓம் ஸ்ரீராமனாம் தோட்டத்தில் நாமந்தனை உயர்குரலில் கூவிய கானக்குயிலான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

146. ஓம் ஸ்ரீராம நாமமெனும் கூட்டினை அடைந்த கானப் பறவையான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

147. ஓம் ஸ்ரீராம, ராம, க்ருஷ்ண என இரவு பகல் கூவின, குயிலை வென்ற குரலினிமை படைத்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

148. ஓம் ஸ்ரீராமனோடிணைந்த, கானத்தில் மேலெழும்பிய இன்குரலு-

டைய / ஸ்ரீராமநாமமெனும் சிறகுடன் மேலெழும்பிப் பறந்த கானக்குயிலான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

149. ஓம் ஸ்ரீராம நாம விண்மீன் நிறை இசைவானாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

150. ஓம் ஸ்ரீராம பக்திக் கடலின் எல்லையாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

151. ஓம் ஸ்ரீராம பக்திக் கடலில் அமிழ்ந்து திளைத்த ஸங்கீதமத்ஸ்யாவதாரமான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

152. ஓம் ஸ்ரீராம பக்திப் பெரும்பேறு எனும் அமுதக்கடலில் நீந்தி மகிழ்ந்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

153. ஓம் ஸ்ரீராம நாம ஸங்கீர்த்தனத்தில் மிக்க இன்புற்ற ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

154. ஓம் ஸ்ரீராமனின் அனந்த கல்யாண குணங்களை ஏத்திப்பாடிய தெய்வீகப் பாடகரான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

155. ஓம் ஸ்ரீராம நாமமெனும் தேனினைப் பருகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

156. ஓம் ஸ்ரீராமனின் தேனினுமினிய நாமத்தினை மகிழ்ந்து பாடிய (கானக்குயிலான) ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

157. ஓம் ஸ்ரீராம நாமமே இனிது ஒலித்து மூச்சுக் காற்றாய் வெளிவரும் இன்குரலுடைய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

158. ஓம் ஸ்ரீராம நாமமாகிய இன்னொலியினைத் தன் உடலாகிய புல்லாங்குழலில் இசைத்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

159. ஓம் ஸ்ரீராம, ராம என இனிமையாக ஒலித்த வீணையாம் உடலுடைய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

160. ஓம் ஸ்ரீராம பூஜையாக வீணை இசைத்து மங்களமான ராகங்களைப்பாடிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

161. ஓம் ஸ்ரீராமநாமமே வெளி எண்ணங்களை விரட்டி மூச்சுக்காற்றாய் உள்நிரப்பும், உட்தங்கும் ப்ராணாயாமமாக அமைந்த நாதயோகியான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

162. ஓம் ஸ்ரீராமனை நாதத்தில் உபாஸிக்கும் வழிகாட்டிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

163. ஓம் ஸ்ரீராமனின் திருப்பள்ளி எழுச்சியாக இனிதுபாடி ஆலாபனை செய்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

164. ஓம் ஸ்ரீராம, ஸீதாராம என அத்யந்த வாத்ஸல்யத்துடன் கொஞ்சிக்கூவி அழைக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

165. ஓம் ஸ்ரீராமனுக்குத் தன் பாட்டுத்தேன் கலந்த பக்திப்பாலைப் பருகுவித்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

166. ஓம் ஸ்ரீராமனுக்குத் தனது ஞானமாகிய வெண்ணெயை உண்ணு-

வித்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

167. ஓம் ஸ்ரீராமனை மகிழ்விக்கும், தம்புராவுடன் இனிது இணைந்த, செவிக்கின்பமான, தேனே ஆன பாட்டினை அர்ப்பித்த ஸத்-குருவுக்கு நமஸ்காரம்.

168. ஓம் ஸ்ரீராமனைப் பாடுவதின் ஸ்வானுபவத்தில் த்யானத்திலாழ்ந்து அப்படியே ஸமாதி நிலைக்குச் சென்று விடும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

169. ஓம் ஸ்ரீராமனின் திருவடிகளை த்யானிக்கும் தேவகங்கையில் நீரா-டுதலை வழக்கமாகக் கொண்ட ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

170. ஓம் ஸ்ரீராமனைத் தன்மனமாகிய பொற்பீடத்தில் நன்கு பிரதிஷ்டை செய்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

171. ஓம் ஸ்ரீராமனின் ஒளிமய வடிவினை த்யானித்தலில் ஈடுபட்ட ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

172. ஓம் ஸ்ரீராமனைத் தன் கானாம்ருதத்தால் அபிஷேகித்த ஸத்குரு-வுக்கு நமஸ்காரம்.

173. ஓம் ஸ்ரீராமனுக்குத் தன் அன்பெனும் பொன்மயமான வஸ்திரத்தைப் போர்த்திய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

174. ஓம் ஸ்ரீராமனுக்குத் தன் தெய்வீக வாக்கெனும் ஆடை அணிவித்த (ஸ்ரீராமனுக்கு ஆடையாகிய தெய்வீக வாக்கினை உடைய) ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

175. ஓம் ஸ்ரீராமனை நாமகானமெனும் வாடாத கானமலர் மாலைகளி-னால் அலங்கரித்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

176. ஓம் ஸ்ரீராமனுக்கு ஆயிரக்கணக்கான கீர்த்தனங்கள் எனும் ஒளிவீ-சும் ரத்னமாலைகளாம் பணிபூட்டிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

177. ஓம் ஸ்ரீராமனுக்குத் தனது துதியும் பக்தியுமே தூப தீபங்களாய் அர்ப்பணித்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

178. ஓம் ஸ்ரீராமனை நாமஸ்மரணை எனும் மலர்களால் அர்ச்சித்த ஸத்-குருவுக்கு நமஸ்காரம்.

179. ஓம் ஸ்ரீராமன் விரும்பும், தனது தாஸ்ய, வாத்ஸல்ய, மதுர, ப்ரேம, பக்தி உணர்வுகள் பொங்கித் ததும்பும், பலவகைப்பட்ட, தெய்-வீகமான பாட்டுக்களையே இனிய உணவாகப் படைத்த ஸத்-குருவுக்கு நமஸ்காரம்..

180. ஓம் ஸ்ரீராமனுக்குத் தனது பூஜையின் பலனையே நிவேதித்த ஸத்-குருவுக்கு நமஸ்காரம்.

181. ஓம் ஸ்ரீராமனால் பெறும் முடிவில்லா இன்பத்தையே தாம்பூலமாக ஸமர்ப்பித்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

182. ஓம் ஸ்ரீராமனுக்கு தீபாராதனமாகிய ஆத்ம ஒளியுடைய ஸத்குரு-வுக்கு நமஸ்காரம்.

183. ஓம் ஸ்ரீராமனை தரிசிக்கும் இத்தீபாராதனத்தில் மகிழ்ந்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

184. ஓம் ஸ்ரீஸீதாராம ஸன்னிதியில் தெண்டனிட்ட ஸங்கீதவடிவாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

185. ஓம் ஸ்ரீராமன் எல்லாவற்றுக்கும் ஸாரமாகும் தன்மையை மிக அழகாகப் பாடிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

186. ஓம் ஸ்ரீராமன் ஸர்வஸாக்ஷி என்பதற்கு ஸாக்ஷியான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

187. ஓம் ஸ்ரீராம ஸ்வானுபவத்தினால் இனிது பொழிந்த ஸங்கீதமாகிய தெய்வ வாக்கே ஆன ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

188. ஓம் ஸ்ரீராமனைக் கொஞ்சிடும் தேனொழுகும் கானத்தில் சிறந்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

189. ஓம் ஸ்ரீராமன் மகிழ்ந்தாடும்படி ராம, ராம, கோவிந்த, முகுந்த என்று கொஞ்சிக்கூவி அழைத்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

190. ஓம் ஸ்ரீராமனை மகிழ்விக்கும் பல வண்ணப்பாட்டுக்களில் திறம்படைத்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

191. ஓம் ஸ்ரீராமன் மகிழ்ந்தாடும் இசை அரசரான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

192. ஓம் ஸ்ரீராமனால் மகிழ்ந்தாட்டுவிக்கப்பட்ட கானவடிவான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

193. ஓம் ஸ்ரீராமனிடம் அன்பு எனும் கரும்புவில்லும், ஸப்தஸ்வரங்களாகிய மலர்க்கணைகளும் கொண்டு இசைவிரும்பியின் இதயத்தை வென்ற ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

194. ஓம் ஸ்ரீராமனின் இன்குணங்களைப் பாடுதலில் இன்புற்ற குருநாதருக்கு நமஸ்காரம்.

195. ஓம் இசை விரும்பியான ஸ்ரீராமனை விரும்பிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

196. ஓம் மோஹனராமனிடம் மோஹம் கொண்ட ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

197. ஓம் காமமில்லாத, ஸ்ரீராமனே விருப்பம் ஆன / காமமில்லாத ஸ்ரீராமனால் விரும்பப்பட்ட / காமமில்லாதவரும் ஸ்ரீராமனால் விரும்பப்பட்டவரும் ஆன ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

198. ஓம் பரசுராமனை வென்ற ஸ்ரீராமனால் வெல்லப்பட்ட மனதையுடைய / தன் மனத்தை வென்று ஸ்ரீராமனை அடைந்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

199. ஓம் அழகிய ராமனைக் கொஞ்சும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

200. ஓம் ஸ்ரீஸீதாராமனைப் பூஜித்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

201. ஓம் ஜகதாத்மாவான ஸ்ரீராமனைத் தனது ஆத்மாவில் ஆனந்தித்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

202. ஓம் அழகினிய பெயருடைய ஸ்ரீராமனை மகிழ்விக்கும் செவிக்கினிய கானத்தில் ஒன்றிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

203. ஓம் இசை அன்பனாகிய ஸ்ரீரகுவரனை விரும்பிய மனதுடைய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

204. ஓம் தனது இதயத்தில் கூத்தாடும் ஸ்ரீராமனை இன்னிசையால் சூழ்ந்து தழுவும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

205. ஓம் அமுத நிலவு முகம் படைத்த ஸ்ரீராமன் மேல் அமுதகானம் படைத்த - கானாமுதம் பொழியும் நிலவான - ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

206. ஓம் அமுதினிமை கொண்ட ஸ்ரீராமனின் பேச்சினைப்பருகி இன்பம் கொண்ட ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

207. ஓம் அமுதரஸம் நிறைந்த ஸ்ரீராமனைப் பருகுவிக்கும் கானாமுதச் சாறு நிறைந்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

208. ஓம் இனிமையாக லாலி (தாலாட்டு) பாடி ஸ்ரீராமனை யோகநித்திரையில் கண்வளரச் செய்யும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

209. ஓம் நாத உருவான ஸ்ரீராமனைத் தன் மூச்சால் வணங்கிய/ நாத உருவான ஸ்ரீராமனையே மூச்சாகக் கொண்ட, வந்தனைக்குரிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

210. ஓம் நற்குணங்களின் இருப்பிடமான ஸ்ரீராமன் உறையும், ஸுஸ்வரத்தின் இருப்பிடமான / நற்குணங்களின் இருப்பிடமான ஸ்ரீராமனைப் பூஜித்த, ஸுஸ்வரத்தின் இருப்பிடமான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

211. ஓம் ஸப்தஸ்வரங்களின் (ஏழு இன்னிசை ஒலிகளின்) மொத்த உருவான ஸ்ரீராமனைப் பாடிய ஸுஸ்வர (இன்னொலி) உருவான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

212. ஓம் ஸ்ரீராமநாமமாகிய முத்துமாலை ஒளிவிடும் ஸங்கீத மூர்த்தியான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

213. ஓம் ஸங்கீத புஷ்பப்பொழிவினால் ஸ்ரீராமமூர்த்தியை அலங்கரித்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

214. ஓம் ஸ்ரீராமசந்த்ர மூர்த்தியுடன் ஒன்றிய ஸங்கீதானந்த (இசை இன்ப) மூர்த்தியான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

215. ஓம் நாதப்ரஹ்மானந்த வடிவில் ஸ்ரீராமன் உறையும் நாதாலயமான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

216. ஓம் நாதாவதாரமான ஸ்ரீத்யாகப்ரம்ம ஸத்குருநாதருக்கு மீண்டும் மீண்டும் நமஸ்காரம்.

217. ஓம் ஸ்ரீராம சைதன்யரான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

218. ஓம் ஸ்ரீராமனிடத்து அன்பின் .அவதாரமான ஸத்குருவுக்கு நமஸ்-காரம்.

219. ஓம் ஸ்ரீராமனிடத்து அன்பே வடிவான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

220. ஓம் ஸ்ரீராமனின் கோயிலாம் உடல் கொண்ட ஸத்குருவுக்கு நமஸ்-காரம்.

221. ஓம் ஸ்ரீராமனின் வடிவான இதயங்கொண்ட ஸத்குருவுக்கு நமஸ்-காரம்.

222. ஓம் ஸ்ரீராமன் அணிசெய்த அன்பான இதயத்தையுடைய / தனது அன்பான இதயத்தால் ஸ்ரீராமனை அணிசெய்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

223. ஓம் ஸ்ரீராமன் கோயில்கொண்ட நல்லிதயத்தினையுடைய ஸத்கு-ருவுக்கு நமஸ்காரம்

224. ஓம் ஸ்ரீராமனைத் தன்னுள் கண்டு மகிழ்ந்த ஸத்குருவுக்கு நமஸ்கா-ரம்.

225. ஓம் ஸ்ரீராமனைத் தன்னுள் அநுபவித்தலில் நன்கு ஆழ்ந்த ஸத்-குருவுக்கு நமஸ்காரம்.

226. ஓம் ஸ்ரீராம பக்தி எனும் யோகத்தில் மேம்பட்ட ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

227. ஓம் ஸ்ரீராம பக்தியின் ஸாரத்தின் அனுபவமே ஆன ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

228. ஓம் ஸ்ரீராம தாரக மந்திரத்தின் இசைவடிவான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

229. ஓம் ஸ்ரீராமனின் ஒளிக்கதிர்க்கூட்டத்தினால் சூழப்பட்ட ஸத்குரு-வுக்கு நமஸ்காரம்.

230. ஓம் ஸ்ரீராம த்யானத்தில் ஒன்றி ஒளிரும் திருமுகத்தினையுடைய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

231. ஓம் ஸ்ரீராம நாமமே நெற்றிக்கோடுகளாய் அமைந்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

232. ஓம் ஸ்ரீராமனின் திவ்ய ரூபத்தின் தோன்றலில் (தெய்வீக வடிவம் தன் கண்முன் தோன்றலில்) விரிந்து மலர்ந்த தாமரைக் கண்

களுடைய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

233. ஓம் ஸ்ரீராம நாமமெனும் மலரின் நறுமணத்தினை முகர்ந்து இன்புறும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

234. ஓம் ஸ்ரீராம நாமமெனும் இன்னமுதைச் சுவைக்கும் இன்நாவுடைய / இன்னமுதாம் ஸ்ரீராமநாமத்தினை இனிது ஒலிக்கும் நாவுடைய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

235. ஓம் ஸ்ரீராமனைப் பாடிய இன்குரலுடைய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

236. ஓம் ஸ்ரீராமனின் வடிவம் பொறிக்கப்பட்ட நல்லிதயத்தினை உடைய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

237. ஓம் ஸ்ரீராமனைப் பூஜிக்கும் நாம மலர்கள் கொண்ட திருக்கரங்களுடைய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

238. ஓம் ஸ்ரீராமனை மகிழ்விக்கும் தெய்வீக கானமெழுப்பும் மணிபூரக சக்ரத்தையுடைய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

239. ஓம் ஸ்ரீராமனின் வடிவே ஆன ப்ரணவ நாதத்தினை எழுப்பும் மூலாதார சக்ரத்தையுடைய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

240. ஓம் ஸ்ரீராமன் திருநாமத்தை இசைத்த வண்ணம் திருவையாறு எனும் புனிதத் தலத்திற்குப் புனிதமூட்டிய தாமரைப்பாதங்கட்கு நமஸ்காரம்.

241. ஓம் ஸ்ரீராமனுடன் கலந்த உயிர்மூச்சுடைய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

242. ஓம் ஸ்ரீராமனுக்கு மிகவும் பிடித்த தெய்வீகக் குரல், வாக்கினை உடைய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

243. ஓம் ஸ்ரீராம மயமான பேச்சுடைய ஸத்குருவுக்கு நமஸ்காரம்

244. ஓம் ஸ்ரீராம நாமமெனும் சர்க்கரை கலந்த இனிய பேச்சுடைய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

245. ஓம் ஸ்ரீராம நாம மலர்மாலைகள் மார்பில் மணம் வீசும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

246. ஓம் ஸ்ரீராம பக்தியெனும் சந்தனம் பூசிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

247. ஓம் ஸ்ரீராம பக்தர் எனும் தனி அடையாளங்கொண்ட ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

248. ஓம் ஸ்ரீராம நாமமெனும் உடைவாளினை தரித்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

249. ஓம் ஸ்ரீராமனை ஸ்மரித்தலாலேற்படும் மயிர்க்கூச்சமே கவசமாய் தரித்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

250. ஓம் ஸ்ரீராம பக்தி நெறியில் இடையூறுகிய காமக்ரோதங்கள் முதலான எதிரிகளைப் பூண்டுடன் அழிக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

251. ஓம் ஸ்ரீராம பக்தியின் இலக்கணமான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

**252.** ஓம் ஸ்ரீராமனையே பூஜித்து வணங்கிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

**253.** ஓம் ஸ்ரீராமனுக்குத் தான் அடியவன் என்ற உணர்வுடன் வணங்கிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

**254.** ஓம் ஸ்ரீராமனின் அடியார்க்கடியானாகத் தன்னைக் கருதிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

**255.** ஓம் ஸ்ரீராமனையே எப்பொழுதும் நாடிய மனதுடைய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

**256.** ஓம் ஸ்ரீராம பக்தியில் நிலைத்திருந்த தபஸ்வியான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

**257.** ஓம் ஸ்ரீராமனிடம் உண்மையான பக்தி எனும் பதவியினை உடைய, ஒளிமிகுந்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

**258.** ஓம் ஸ்ரீராமனை உணர்தல் எனும் அமிழ்தினைத் தானும் பருகிப் பிறர்க்கும் அளிக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

**259.** ஓம் ஸ்ரீராமனாகவே அனைத்தையும் கண்ட ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

**260.** ஓம் ஸ்ரீராமனைத் தன்னுள் எப்போதும் கண்ட ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

**261.** ஓம் ஸ்ரீராமனிடம் அன்பில் நிலைத்து நின்ற ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

**262.** ஓம் ஸ்ரீராம நாம ஸ்மரணத்தில் இன்புற்ற ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

**263.** ஓம் ஸ்ரீராம ஸந்நிதியில் வழிபட்டு இன்புற்ற ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

**264.** ஓம் ஸ்ரீராமனை இனிய கீர்த்தனைகளில் துதித்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

**265.** ஓம் ஸ்ரீராம நாமத்தினைப் பாடுதலையே தன் ஒரே வேலையாகக் கொண்ட ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

**266.** ஓம் ஸ்ரீராமனது நற்குணங்களை உயர்ந்த குரலில் பாடிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

**267.** ஓம் ஸ்ரீராமனைத் தன் இதயத் தாமரையால் அர்ச்சித்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

**268.** ஓம் ஸ்ரீராமனைத் தனிப்பட்ட மனதுடன் ஆராதித்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

**269.** ஓம் ஸ்ரீராமனின் அருகாமையில் உலக விஷயங்களைப் புற்பூண்டுக்குச் சமமாய்க் கருதிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

**270.** ஓம் ஸ்ரீராமனின் எல்லையற்ற பெருமையை வியந்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

**271.** ஓம் ஸ்ரீராமனின் திருவடிகளை இறுகப் பற்றித் தன்னை மறந்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

272. ஓம் ஸ்ரீராமனை இறுகத்தழுவி மயிர்க்கூச்சடைந்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

273. ஓம் ஸ்ரீராமனை நினைத்த மாத்திரத்தில் புல்லரிப்படைந்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

274. ஓம் ஸ்ரீராமனை நினைத்தலில் இடைவிடாது நிலைத்து நின்ற ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

275. ஓம் ஸ்ரீராமனை எப்பொழுதும் நினைத்துக் கவலையொழிந்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

276. ஓம் ஸ்ரீராம நாம ஜபம், ஸ்மரணம் இவற்றையே வ்ரதமாகக் கொண்ட புனிதரான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

277. ஓம் ஸ்ரீராம மயமான வாழ்வை நடத்திய மாபெரும் ஞானியான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

278. ஓம் ஸ்ரீராமனின் திருவடிதனை வழிபடுதலில் வழிகாட்டிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

279. ஓம் ஸ்ரீராமனின் மிக உயர்ந்த குணங்களை ஏத்திப்பாடிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

280. ஓம் ஸ்ரீராமனின் அருளின் ஆற்றலை அறுதியிட்டு உறுதிகூறிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

281. ஓம் ஸ்ரீராமனுடன் இறுகப் பிணைப்புண்ட ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

282. ஓம் ஸ்ரீராமனைத் துதித்துப் பாடுதலில் தனிச் சிறப்பு பெற்ற ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

283. ஓம் ஸ்ரீராமனின் வழிபாட்டிலேயே சுற்றிச் சுழன்ற ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

284. ஓம் ஸ்ரீமத்ராமாயண பாராயணத்தை நெறிமுறையாகக்கொண்ட ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

285. ஓம் ஸ்ரீமத்ராமாயணத்தை மீண்டும் உரைத்துப்பாடிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

286. ஓம் ஸ்ரீராமனின் மங்களமான சரித்திரம் எனும் கடலில் ஆழ்ந்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

287. ஓம் ஸ்ரீமத்ராமாயணத்தின் பற்பல சுவைமிகு கட்டங்களாகிய முத்துக்களை ஒளிவீசும் கீர்த்தன மாலைகளாகச் செய்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

288. ஓம் ஸ்ரீராமனின் இறைமையை மிகப்பல க்ருதிரத்னங்கள் மூலம் ஒளிரச்செய்யும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

289. ஓம் ஸ்ரீராம நாமத்தை இசைச்சுவடியில் அழியாது பொறித்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

290. ஓம் ஸ்ரீராம தாரக நாமத்தின் பெருமையை வெளிப்படுத்திய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

291. ஓம் ஸ்ரீராமனின் தாரக(நாம) வடிவின் (கடைத்தேற்றும் வடிவினனான ஸ்ரீராமனைப் பற்றிய) உண்மையை அறியச் செய்யும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

292. ஓம் ஸ்ரீராமனைப் புகழ்ந்து பாடுதலில் பெருஞ்சிறப்பு வாய்ந்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

293. ஓம் ஸ்ரீராம பஜனை ஆனந்தம் மிளிரும் கீர்த்தனைகள் மிகப் பலவற்றை தாராளமாய் அளித்துள்ள ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

294. ஓம் ஸ்ரீராமனுக்கு எப்போதும் அஞ்சலியாக கானம் பொழிந்த, சிறப்புள்ள ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

295. ஓம் ஸ்ரீராமனின் கண்ணுக்கின்பமான வடிவழகினை வர்ணித்துப் பாடிய தலையாய சிறப்புடைய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

296. ஓம் ஸ்ரீராமனது திவ்யநாமஸங்கீர்த்தனத்தில் மகிழ்ந்த முனிவரான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

297. ஓம் ஸ்ரீராம நாமத்தைக் கேட்ட மாத்திரத்தில் மயிர்கூச்சடைந்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

298. ஓம் ஸ்ரீராமனின் திருவடிகளைச் சித்தத்தில் தரித்த அருள்நிறை பாடகரான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

299. ஓம் ஸ்ரீராமனின் பாதங்களை அர்ச்சிக்கும் பாட்டு மலர்களின் நறுமணம் பரப்பும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

300. ஓம் ஸ்ரீராமனைப்பாடும், கதம்ப மலர்களின் நறுமணம் கமழும் இசைத்தென்றலான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

301. ஓம் ஸ்ரீராம எனும் இனிய ஒலியையே மொழிந்த ஸுஸ்வரீ (இன்னொலி) வீணையான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

302. ஓம் ஸ்ரீராமனுக்கே அர்ப்பணமாகிய இசைவடிவான குருநாதருக்கு நமஸ்காரம்.

303. ஓம் ஸ்ரீராமனிடம் அன்பு, ஸங்கீத ஞானம் (இசைப்புலமை) இவற்றின் மொத்த உருவான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

304. ஓம் ஸ்ரீராமனின் இன்பம் ஒலிக்கச்செய்த நாமத்தின் வடிவான/ ஸ்ரீராமனிடத்து இன்பத்தால் ஒலிக்கப்பட்ட நாமத்தின் வடிவான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

305. ஓம் ஸ்ரீராம நாமம் தரும் இன்பஸாரத்தின் நாத வடிவான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

306. ஓம் ஸ்ரீராமனாகிய சந்த்ரனின் கானமாம் கிரணமாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

307. ஓம் ஸ்ரீராமனாம் ஸூர்யனின் நாமக்கதிராகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

308. ஓம் ஸ்ரீராமனிடமிருந்து வேறல்லாத ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

309. ஓம் ஸ்ரீராமநாமத்தில் உறையும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

310. ஓம் ஸ்ரீராம தாரக மந்த்ரத்தின் எல்லையுள் உள்ள ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

311. ஓம் ஸ்ரீராம தாரக மந்த்ரத்தால் அடையப்படும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

312. ஓம் ஸ்ரீராம தாரக மந்த்ரத்தை உபதேசிக்கும் குருதேவருக்கு நமஸ்காரம்.

313. ஓம் ஸ்ரீராம தாரக மந்த்ரத்தின் உட்பொருளை அறியச்செய்யும் ஆசானாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

314. ஓம் ஸ்ரீராமனும் நாதப்ரஹ்மமும் ஒன்றே என விளக்கும் பல க்ருதிகளை அளித்துள்ள ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

315. ஓம் ஸ்ரீராம பக்தி கரைபுரண்டோடும் இனிய கீர்த்தனைகளை இதயபூர்வமாகப் பாடுபவர் முன் தோன்றும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

316. ஓம் ஸ்ரீராமனின் அருள் பாலிக்கும் ஸங்கீத அருள் மூர்த்தியான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

317. ஓம் ஸ்ரீராம தாரக மந்த்ர ஜபமாகிய விளக்கொளியில் ஒளிர்கின்ற ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

318. ஓம் ஸ்ரீராமனை ஒருமுகப்பட்ட மனதுடன் சிந்தித்தல் எனும் தூபத்தினால் மணமூட்டப்பெறும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

319. ஓம் ஸ்ரீராம ப்ரேமையில் மலர்ந்த இதய புஷ்பார்ச்சனையில் பிரியமுள்ள ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

320. ஓம் ஸ்ரீராமனிடம் அனன்ய சரணாகதி உணர்வு எனும் தேன் நைவேத்யத்தில் பிரியமுள்ள ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

321. ஓம் ஸ்ரீராம நாம ஸங்கீர்த்தனம், பஜனை எனும் தீபாராதனத்தில் பிரியமுள்ள ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

322. ஓம் ஸ்ரீராம தாரகநாமத்தின் இடைவிடா ஜபத்தில் ஈடுபட்ட சிஷ்யரிடம் பிரியமுள்ள ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

323. ஓம் ஸ்ரீராம ப்ரஸாதமான ஸங்கீத ஞானத்தை அருளும் ஸத்குருநாதருக்கு நமஸ்காரம்.

324. ஓம் ஸ்ரீராம பக்த ஸமூஹத்தினால் பூஜிக்கப்படவேண்டிய ஸத்குரு ஸ்ரீத்யாகராஜஸ்வாமிக்கு மீண்டும் மீண்டும் நமஸ்காரம்.

325. ஓம் (இப்பக்தைக்கு) தம்மைவிட வேறொன்றும் உயர்ந்ததல்லாத, ஒரே

குருவான ஸத்குரு ஸ்ரீத்யாகராஜ ஸ்வாமிக்கு நமஸ்காரம்.

326. ஓம் வரையற்ற நாதசக்தியான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

327. ஓம் நிர்ணயிக்க முடியாத, உயிர்மூச்சே ஆன, நாத ஆற்றலாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

328. ஓம் எல்லையற்ற, முழுமையான நாதவெட்டவெளியான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

329. ஓம் ஆதித்தனை வெல்லும் ஒளிபடைத்த நாதத்தோன்றலாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

330. ஓம் உள்ளத்தை உருக்கும் (கண்ணீர் பெருக்கிடச்செய்யும்) நாதத்தின் ஆத்மாவாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

331. ஓம் மிகவும் போற்றி வணங்கப்படும் நாதகுருவுக்கு நமஸ்காரம்.

332. ஓம் வெம்மையைப் போக்கும், பாதுகாப்பாகிய நிழல் அருளும் நாதக்குளிர்தருவான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

333. ஓம் மிக அடர்ந்த, ஊடுருவ முடியாத நாதக்காடான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

334. ஓம் ஆழங்காணமுடியா, அளவற்ற இன்பம்நிறை நாதப்பெரும் பொற்கடலான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

335. ஓம் அளவு கடந்த இசைப்பெரும் பரப்பகற்சியான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

336. ஓம் என்றும் உள்ள நாதப்ரஹ்மமாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

337. ஓம் அக்ஷரம் (எழுத்து) ஸுஸ்வரம் (இன்னிசைஒலி) இவற்றின் உள் மறைந்துள்ள நாதமே ஆன / எழுத்தும் இன்னொலியும் ஒன்றுபடும் நாதத்தின் ஆத்மாவாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

338. ஓம் வாடாமலராகிய ஸுஸ்வரத்தினால் (இப்பக்தையின் அழியா ஆன்மாவாகிய ஸுஸ்வரமெனும் வாடா மலரினால்) அர்ச்சிக்கப்பட்ட ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

339. ஓம் இயற்கையாகத் தோன்றும் நாதத்தின் வடிவான - முழுமுதற் தோன்றலாகிய நாத உருக்கடவுளான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

340. ஓம் முடிவில்லா நாதானந்தத்தின் மூலமான (வேரான) ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

341. ஓம் இடைவிடா இசை இன்பத்தை உண்டு பண்ணும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

342. ஓம் நிலையில்லா உலகில் நிலையுள்ள ஒரே பொருளான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

343. ஓம் சிந்தனைக்கு அப்பாற்பட்ட வடிவினரான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

344. ஓம் தீவினையை அழிக்கும் திருவடி இணையுடைய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

345. ஓம் அனன்ய பக்தரால் கட்டுண்ட எல்லையற்றவரான ஸத்குரு-வுக்கு நமஸ்காரம்.

346. ஓம் எல்லையற்ற ஸ்ரீராமனைப் பிணைக்கும் இனிய கானத்தினை உடைய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

347. ஓம் அந்தராத்மாவான ஸ்ரீராமனைப் பாடும் இசையின் ஆத்மாவான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

348. ஓம் அளவு கடந்த ஸங்கீதானந்த அலையான ஸத்குருவுக்கு நமஸ்-காரம்.

349. ஓம் தானே பொங்கிப் பீறிட்ட நாத அம்ருத ஊற்றான ஸத்குரு-வுக்கு நமஸ்காரம்.

350. ஓம் நாதத்தின் தங்கு தடையில்லாப் போக்கான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

351. ஓம் அமுத வாக்குக்கும் குரலுக்கும் அதிபதியான ஸத்குருவுக்கு நமஸ்காரம்

352. ஓம் அளவற்ற இனிமை படைத்த வார்த்தைகளை உபயோகித்தலில் வல்லுநரான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

353. ஓம் இடைவிடா நாதமழை பொழிந்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

354. ஓம் மிக இனிமையான கானப் பெருக்கிட்ட ஸத்குருவ'க்கு நமஸ்காரம்.

355. ஓம் இணையற்ற க்ருதிகர்த்தாவான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

356. ஓம் அற்புதமான கவிச்சிறப்புடையவரான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

357. ஓம் அன்புடன் கூடிய பக்தியினால் மணம் பெற்ற, ஏழு இன்னிசை ஒலிகளை இதழ்களாகக் கொண்ட நாத மலரான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

358. ஓம் மிக்க மணங்கமழும் ஆயிரம் இதழ் கொண்ட நாம மலராகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

359. ஓம் அதிகாலையில் இன்னொலி இசையினால் வணங்கப்படவேண்-டிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

360. ஓம் இடைவிடா இன்னிசை அஞ்சலி ஸமர்ப்பிக்கப்பட வேண்டிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

361. ஓம் வழுவா நெறியுடன் நாள்தோறும் செய்யப்படும் உபாஸனையில் திருப்தியுறும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

362. ஓம் தன்னையே எப்போதும் நினைக்கும் அனன்ய பக்தநோக்கில் புலப்படும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

363. ஓம் தன்னை இடைவிடாது ப்ரார்த்திப்பவருடன் இடைவிடா, முடிவற்ற நாத வடிவில் உடனிருக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

364. ஓம் தன்னையே ஆழ்ந்து அன்புடன் உபாஸிப்பவரை நன்கு காக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

365. ஓம் வேறு கதியற்றுச் சரணடைந்தவரை அன்புடன் காக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

366. ஓம் தன்னையே உபாஸிப்பவர்க்கு ஸங்கீத சிக்ஷை அளிக்கும் குருவுக்கு நமஸ்காரம்.

367. ஓம் கொடுப்பதில் நிகரற்ற ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

368. ஓம் நிலையான உதவி அருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

369. ஓம் குறைவற்ற, அழியாத நாத வித்தையை அருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

370. ஓம் எல்லையற்ற ஸங்கீதானந்தமாகிய வரப்ரஸாதத்தை அருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

371. ஓம் கூர்ந்து, நிலைத்து ஆழ்ந்த நோக்கினால் நாதப்ரஹ்ம ஞானத்தை அருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

372. ஓம் வேறெந்த நோக்குமற்று நாதத்தை உபாஸிப்பவருக்கு முழுமையும் நிறைவுமருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

373. ஓம் அனன்ய சரணுகதி அடைந்தவரை (பிறவித்தளையினின்று) விடுவிக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

374. ஓம் கைகூப்பி அஞ்சலி செய்பவரைவிட்டகலாத ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

375. ஓம் தன்னையே விரும்பி வழிபடுபவரின் உயிர் மூச்சான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

376. ஓம் பரிவின் உருவான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

377. ஓம் இணையற்ற ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

378. ஓம் அமைதியின் ஆழ்பெரும் ஆழியான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

379. ஓம் இடைவிடா நாமஸங்கீர்த்தனத்தில் (இறைவன் பேர் பாடுதலில்) பிரியமுள்ள ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

380. ஓம் அனன்ய (தன்னையே உபாஸிக்கும்) பக்தைக்கு மிக வேண்டியவரான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

381. ஓம் அன்பும், பண்ணும் நன்கொருங்கிணைந்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

382. ஓம் பக்த அந்தராத்மாவான, ராக உருவான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

383. ஓம் கல்லாத பக்தையின் ஆத்ம தாபத்தினாலேயே அர்ச்சிக்கப்பட்ட

ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

384. ஓம் திறமையற்ற பக்தையின் அன்பு, எண்ணம், மொழி, செயலினாலேயே பூஜிக்கப்படும் குருவுக்கு நமஸ்காரம்.

385. ஓம் தன்னிடமே ஈடுபட்டு உபாஸிப்பவரைத் தன்னுடன் சேர்த்துக் கொள்ளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

386. ஓம் நாத ஒளித்தோன்றலாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

387. ஓம் நாத வெளியினை ஊடுருவிப்பரந்த தெய்வீக ஒளியான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

388. ஓம் முதலும் முடிவுமில்லாத அருட்பேரொளியாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

389. ஓம் தொடர்ந்த ஸங்கீதானந்தத்தினால் சூழப்பட்ட ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

390. ஓம் ஆராதிப்பவர் இதயத்தாமரையில் வஸிக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

391. ஓம் உருகும் பக்த சித்தத்துடன் கலந்துவிட்ட ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

392. ஓம் உயிர்மூச்சினை அளிக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

393. ஓம் தன்னை அடைந்தவரின் ஒரே செல்வமான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

394. ஓம் ஆத்மாவை நிவேதிப்பவர் இதயபூர்வமான அன்பின் முழுமையான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

395. ஓம் ஆனந்தமூட்டும், ஸங்கீத உயர் குருவுக்கு நமஸ்காரம்.

396. ஓம் ஆசார்ய தேவருக்கு நமஸ்காரம்.

397. ஓம் நீண்ட ஆயுளும் நோயற்ற வாழ்வும் அருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

398. ஓம் சோர்வினை உலுக்கி நீக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

399. ஓம் இன்பூட்டும் கான வித்தையெனும் வரமருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

400. ஓம் ஆழ்ந்ததும் கிடைத்தற்கரியதுமான ராகம், தாளம் இவற்றின் அறிவான செல்வத்தை அருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

401. ஓம் ஆத்மஞானத்தைத் தூண்டி எழுப்பும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

402. ஓம் ஆத்மாவின் உண்மை இயல்பு பற்றிய அறிவை அருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

403. ஓம் ஆத்மாவுடன் ஒன்றிடலை, உண்டுபண்ணும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

404. ஓம் இஷ்ட தெய்வமான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

405. ஓம் உள்ள உடற்சோர்வினைப் போக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

406. ஓம் வேண்டுபவர்க்கு நாத வித்தையின் முழுமையை அருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

407. ஓம் கரும்புச் சாற்றுப் பெருக்காம் இனிய கவித்வத்தை அருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

408. ஓம் ஆனந்தமே ஆன, மங்களம் தரும் ஸங்கீதத்தை வேண்டிய வரமாக அருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

409. ஓம் இவ்வுலக இன்பமும் ஞானமோக்ஷமும் (அறிவின் மூலம் விடுதலை) அருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

410. ஓம் மிகவும் விரும்பி முயற்சிக்கப்படும் இசையுடன் ஒன்றுபடுதலாகிய / ஸங்கீதம், லயம் எனும் செல்வத்தினை அருளும் குருநாதருக்கு நமஸ்காரம்.

411. ஓம் இறைவன் அருளாலேயே அடையக் கூடிய நாதவித்தையின் நுட்பங்களை உபதேசிக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

412. ஓம் நன்புகழ் படைத்த ஸங்கீத குருவுக்கு நமஸ்காரம்.

413. ஓம் உயர்ந்த ஸங்கீதமயமான வாழ்விற்கு உதாரணமான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

414. ஓம் மேலெழும்பிய நாத ஒளியான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

415. ஓம் கரைபுரண்டோடும் தெய்வீக நாதகங்கையாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

416. ஓம் மிக உயர்ந்த ஸங்கீத ஸித்தரான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

417. ஓம் உத்ஸவ ஸம்ப்ரதாயக் கீர்த்தனைகளில் ஒப்பற்ற ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

418. ஓம் உத்ஸவ ஸம்ப்ரதாய இனிய கீர்த்தனையில் ஸ்ரீராமனது நூபுர ஒலியினைக் கேட்பிக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

419. ஓம் மேலெழும்பிய இன்குரலில் ராம ராம எனக் கூவிய இசைக்குயிலாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

420. ஓம் விடியற்காலையில் இசைவழிபாட்டினை விதித்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

421. ஓம் அன்பினால் நனைந்த, தனித்த, தன்னையே வழிபடும் பக்தரை விடியற்காலையில் தன் முன் பாடவைக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

422. ஓம் வழிபடுவரை உயர்த்தி மீட்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

423. ஓம் வழிபடுபவர் உள்ளுள்ள ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

424. ஓம் மேலெழும்பும் இன்னிசை ஒலியுடன் ஒன்றிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

425. ஓம் வழிபடுபவரைக் காக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

426. ஓம் மங்களம் அருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

427. ஓம் கடன்பட்டமையால் தொடரும் கட்டுக்களினின்று விடுவிக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

428. ஓம் நன்னெறியில் வழிகாட்டும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

429. ஓம் உள்ளன்புடன் புகழப்படும், பூஜிக்கப்படும் ஸத்குருவுக்கு நமஸ்-காரம்.

430. ஓம் அழியா இடம் பெற்றுள்ள ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

431. ஓம் பார்க்க வேண்டிய ஒரே பொருளான ஸத்குருநாதருக்கு நமஸ்-காரம்.

432. ஓம் தனிப்பட்ட பக்தியெனும் புஷ்பத்தால் உபாஸிக்கப்படும் ஸத்குரு ஸ்ரீத்யாகராஜ ஸ்வாமிக்கு மீண்டும் மீண்டும் நமஸ்காரம்.

433. ஓம் தனிப்பட்ட பக்தியினால் உவப்புறும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

434. ஓம் ஒருமுனைப்பட்ட த்யானத்தினால் அடைய வேண்டிய ஸத்கு-ருவுக்கு நமஸ்காரம்.

435. ஓம் ஒருமுனைப்பட்ட பக்த உள்ளுள் ஞானக்கண்ணை மலரச்செய்-யும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

436. ஓம் ஒருமுனைப்பட்டு த்யானிப்பவர் செவிப்புலனுக்குட்படும் ஸுஸ்-வர அமுதக்குரலான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

437. ஓம் ஒரே நிஷ்டையுடன் த்யானிப்பவர் உள்வானில் உதித்தெழும் நாத ஒளியான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

438. ஓம் ஒரே மனதுடன் பூஜிப்பவருக்கு ஸங்கீதமாகிய பேரின்பத்தை அளிக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

439. ஓம் ஒருமுகப்படுதல் அருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்

440. ஓம் ஓங்கார நாத வடிவான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

441. ஓம் ஆற்றலூட்டும் நாத சக்தியான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

442. ஓம் ஆனந்தத்தை அளிக்கும் நாதத்தையே ஒலியாகக் கொண்ட ப்ரஹ்மனான / மேகத்தின் கம்பீரக்குரலே ஒலியாகக் கொண்ட ப்ரஹ்மனான / ஆனந்தத்தை அளிக்கும் நாத வடிவாய் அவதரித்த ப்ரஹ்மனான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

443. ஓம் இன்குரலருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

444. ஓம் கருணை ததும்பும் பார்வையுடைய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

445. ஓம் மாசினை அழிக்கும் பேரொளி வீசும் பார்வையுடைய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

446. ஓம் துன்பம் நீக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

447. ஓம் செயலில் முழுத்திறமையளிக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

448. ஓம் கர்மக் கட்டினைத் தகர்த்தெறியும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

449. ஓம் காலனுக்குக் காலனாம் பரம்பொருளான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

450. ஓம் கருணைக்கடலான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

451. ஓம் முயற்சியின் முழுநிறைவளிக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

452. ஓம் தங்கக்குரலுடைய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

453. ஓம் ராமசந்த்ரனின் ஒளிக்கிரணங்களை வாரி இறைக்கும் ஸுஸ்வர பூர்ணசந்த்ரனான (இன்னிசையொலி நிறைமதியான) ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

454. ஓம் கீர்த்தனைகள் அருளிச்செய்த ஆசார்யனான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

455. ஓம் அரவரசின் மேல் பள்ளி கொண்டோனைப் பாடி ஆனந்தப்படுத்திய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

456. ஓம் கூர்மாவதாரனைப்பாடி ஆனந்தித்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

457. ஓம் கிருஷ்ணன் வஸிக்கும் இனிய கீர்த்தனைக்கூட்டங்களைச் செய்த / இனிய கீர்த்தனங்களை ஸ்ரீக்ருஷ்ணனுக்கு ஆடையாக நெய்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

458. ஓம் கிருஷ்ணலீலையை ரஸித்த பாடகராகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

459. ஓம் கேசவனைப் பாடுதல் மூலம் உயர்ந்த ஞானத்தினை அளிக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

460. ஓம் முக்தி அளிக்கும் கல்யாண ராமனைப் பாடும்படி ஆக்ஞாபித்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

461. ஓம் ஸப்தஸ்வரங்களின் ஆனந்த ஒலியே உடலாய் அமையப்பெற்ற ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

462. ஓம் கோதண்டராமனை இசைமூலம் ஆராதித்து ஆனந்தித்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

463. ஓம் ஜானகியை மனையாளாகக் கொண்ட ஸ்ரீராமன் முன் பாடுதலில் ஆர்வம் கொண்ட ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

464. ஓம் துதிக்கும் பக்தரைக் காக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

465. ஓம் சிஷ்ய உடலாம் வீணையில் ஸுஸ்வரமயமான இன்னொலிகளை எழுப்பும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

466. ஓம் ஒருநொடிப்பொழுதும் மறக்கப்படாத ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

467. ஓம் அழிபவைக்குள்ளிருக்கும் அழியா ஆத்மாவாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

468. ஓம் அருளிரக்கம் கொண்ட ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

469. ஓம் உடன்காத்தருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

470. ஓம் பாற்கடலில் பள்ளி கொண்டோனை மிக இனிய அழகிய பாட்டுகளால் அணிசெய்து மகிழ்ந்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

471. ஓம் பாற்கடற்றுயிலும் ஸ்ரீராமனைத் தன் இன்னிசைக் கடலில் பள்ளி கொள்ளச்செய்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

472. ஓம் கொந்தளிக்கும் கடலாம் மனதை சமனப்படுத்தும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

473. ஓம் மங்களமருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

474. ஓம் கணத்தில் கவிபாடும் திறனருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

475. ஓம் கருடனை வாகனமாகக் கொண்ட ஸ்ரீமந்நாராயணனைப் பாடுதலில் உயர்ந்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

476. ஓம் செங்கோலேந்திய ராமனைச் சிறப்பித்துப் புகழ்ந்து பாடிய (யாரால் செங்கோலேந்திய ஸ்ரீராமன் சிறப்பித்துப் புகழ்ந்து பாடப்பட்டானோ, அந்த) ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

477. ஓம் மிகவும் போற்றி வணங்கத்தக்க ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

478. ஓம் கம்பீரமான குரலுடைய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

479. ஓம் ஆழ்ந்தறிய முடியா முழுமுதற் பொருளான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

480. ஓம் ஆழ்ந்து ஊடுருவும் நாதத்தின் நுண் ஆற்றலாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

481. ஓம் கங்கையின் புனிதமுடைய நாமமாகிய தீர்த்தத்தைத் தெளிக்கும் கான அலையான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

482. ஓம் அறியமுடியா இசைக்கடவுளாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

483. ஓம் கானக்கடலில் ஊடுருவிய (யாரால் கானக்கடல் ஊடுருவப்பட்டதோ, அந்த) ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

484. ஓம் குரல், வாக்கின் இனிமையை அருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

485. ஓம் பக்தர்களின் முதன்மையான, நாவு நுனியில் கலைவாணி நிலையாக வஸிக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

486. ஓம் நற்குணங்கள் நிறைந்த ஸ்ரீராமனைப்பாடும் ஆனந்தம் நிரம்பிய, புகழப்பட வேண்டிய, நற்குணங்கள் நிறைந்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

487. ஓம் ராம, ராம என்று நாமமலரினை மொய்த்து முரலும் கானவண்டான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

488. ஓம் தன்னையே உபாஸிக்கும் சிஷ்யையின் ஆத்மா பின்னிப்பிணைந்திருக்கும் ஒளிவடிவமான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

489. ஓம் கோக்கப்பட்ட குணங்களாகிய இந்த அக்ஷரமாலைக்கு அழகூட்டும் குருநாதருக்கு நமஸ்காரம்.

490. ஓம் மிக உயர்ந்த குருநாதருக்கு நமஸ்காரம்.

491. ஓம் பரமாத்மாவே ஆன ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

492. ஓம் மறைந்துள்ள ஆத்மசக்தியான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

493. ஓம் இவ்வில்லத்தின் தெய்வமான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

494. ஓம் இசைப்புலவரான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

495. ஓம் கோவிந்தநாம ஸங்கீர்த்தனம் பாடுவதில் தலைசிறந்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

496. ஓம் ஆழ்ந்த பொருளும் உணர்ச்சிப்பெருக்கும் நிறைந்த பாட்டுக்களின் அதிபதியான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

497. ஓம் முகில்வண்ண ஸ்ரீராமனைப் பாடுதலின் இன்பம் நிறைமுகிலான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

498. ஓம் கொடிய அரக்கர்களை ஒழிக்கும் ஸ்ரீராமனை மயக்கும் இன்னிசைக்குரல் படைத்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

499. ஓம் இனிய நறுமணங்கமழும் நாமமலர்களால் ராமனைப் பூஜிக்கத் தூண்டும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

500. ஓம் திருவடியில் வீழ்ந்தவருக்கு எல்லாம் அருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

501. ஓம் அலையும் உள்ளத்தை நிலைப்படுத்தும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

502. ஓம் திடுக்கிட்டு நடுங்கும் நரம்புகளை வலுப்படுத்தும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

503. ஓம் ஸுஸ்வரத்தின் அழகொளிரும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

504. ஓம் சந்திரனின் அழகுமுகம் படைத்த ராமசந்திரனை இனிது பாடும் ஆனந்தத்தினால் ஒளிரும் திருமுகம் படைத்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

505. ஓம் பாங்குற அமைந்த சொற்களின் இனிமையும் அழகும் மிளிரும் கவித்திறன்மிக்க ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

506. ஓம் அசையும் பொருள், அசையாப் பொருள் இவை அடங்கிய படைப்பு முழுமையிற் பரவி ஊடுருவும் ஓங்காரத்தின் உட்பொருளை அறியச்செய்யும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

507. ஓம் அழகினிய இசைக்குரல் படைத்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

508. ஓம் அழகிய கண்படைத்த ஸ்ரீராமனைப்பாடும் இன்பத்தில் நனைந்த கண்ணுடைய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

509. ஓம் சொல்வளம், பொருள்வளம் மிக்க, உணர்ச்சி சொட்டும் இனிய பாட்டுக்களினால் ஸ்ரீராமனை மகிழ்வித்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

510. ஓம் அறிவடர் ஸ்ரீராமனின் கானத்திலீடுபட்ட அறிவின்ப வடிவான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

511. ஓம் நிலைத்திருக்கும் ஸங்கீதானந்தமாகிய இனிய கீர்த்தனைகளை அளித்துள்ள ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

512. ஓம் உள்ளுள் ஊடுருவிக் கலந்துள்ள ஸத்குருநாதருக்கு நமஸ்காரம்.

513. ஓம் மன அலைவுகளைத் தடுக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

514. ஓம் அறிந்துணரும் திறனைத் தூண்டும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

515. ஓம் (இப்பக்தையின்) எண்ணங்களாலேயே அர்ச்சிக்கப்பட்ட ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

516. ஓம் உள்ளத்தூய்மையூட்டிக் கடைத்தேற்றும் திருநாமத்தையுடைய / உள்ளத்தூய்மையூட்டும் ஸ்ரீராமதாரக நாமத்தினையுடைய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

517. ஓம் ஜபிக்கப்பட்ட ராமதாரகநாம மாலை அணிந்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

518. ஓம் நாதச் சோலையில் நாம மலரை முத்தமிடும் கானமென்காற்றாகிய குருநாதருக்கு நமஸ்காரம்.

519. ஓம் நாமமலரில் நாதத்தேன் உறிஞ்சும் நாதத் தேன்வண்டான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

520. ஓம் உள்ளங்கவர் இன்குரலுடைய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

521. ஓம் சைதன்ய ப்ரம்மன் ஆகிய (அறிவுமயபரம்பொருள் ஆகிய) ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

522. ஓம் தேர்ந்த கவி மேதையாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

523. ஓம் நாம அமுதம் கொட்டும் கானமாகிய தங்கக்கலத்தினைத் திருக்கரத்திலேந்திய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

524. ஓம் கீர்த்தன அம்ருதம் பொழியும் ஸங்கீத தேவதையான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

525. ஓம் அழகிற்சிறந்த ரகுநந்தனனை வந்திக்கும் பக்ததிலகமான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

526. ஓம் பாதுகாப்பு நிழலருளும் குருவரருக்கு நமஸ்காரம்.

527. ஓம் குற்றங்குறைகள் மலிந்த, தானே உந்தப்பட்ட (சரணமடைந்த) சிஷ்யையைக் கரையேற்றும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

528. ஓம் உடைந்த மனதை சமனப்படுத்தும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

529. ஓம் ராமரத்னம் பதித்த கானப்பொன்னாடை போர்த்த நாத தேவதையான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

530. ஓம் கவிதை அணி அலங்காரங்கள் நிறைந்த ரஸமான அழகிய கீர்த்தனைக் கூட்டங்களினால் ஸ்ரீராமனை அலங்கரிப்பதில் திறன்மிகுந்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

531. ஓம் ஜனகர் மகளான ஸீதையின் நற்பேறுன ஸ்ரீராமனைப்பாடிய திருவார்ந்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

532. ஓம் நீரரசனாம் ஆழிமேல் பள்ளி கொண்டோனைக் கீர்த்தனத்தினால் மகிழ்விக்கும் கவியரசராகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

533. ஓம் பிச்சிப்பூ அணிந்த ஸ்ரீராமனை நாம மலர்களால் அர்ச்சிப்பதில் ஈடுபட்ட ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

534. ஓம் ஜானகியின் உயிர்நாயகனாகிய ஸ்ரீராமனின் நாம ஸ்மரணமே உயிர்நிலையான பாடகராகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

535. ஓம் ஜானகீ – நாயகனாகிய ஸ்ரீராமனை கன, நய ராகங்களில் ஆலாபனைசெய்து ஆராதித்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

536. ஓம் புஷ்பஸாரமாகிய தேனினை வென்ற குரலினிமை படைத்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

537. ஓம் ஞானம் வேண்டுபவர் அடைக்கலமாகிய நற்கீர்த்தனங்கள் செய்தருளிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

538. ஓம் உயிர்ச்சக்தியூட்டும் மிகப்பலவாகிய கீர்த்தனங்கள் செய்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

539. ஓம் உயிர்ச்சக்தியாகிய ஸத்குருநாதருக்கு நமஸ்காரம்.

540. ஓம் ஜீவாத்மாவாகிய ஸீதையை சோகவனத்தில் துன்புறுத்தும் வாஸனைகளின் (முற்பிறவிகள், இப்பிறவியைச் சேர்ந்த அனுபவ, எண்ணப் பொறிப்புகளின்) செயல்பாடுகள் எனும் அரக்கர்கூட்டத்தை உடைய கர்மாவின் இணைப்பு எனும் ராவணனைக் கொல்லும் ராம நாமமெனும் அம்பும் நாம கீர்த்தனம் எனும் கோதண்டமாகிய வில்லும் ஏந்திய திருக்கரங்களுடைய பரமாத்மாவாகிய **ஸத்குரு ஸ்ரீத்யாகராஜஸ்வாமிக்கு மீண்டும் மீண்டும் நமஸ்காரம்.**

541. ஓம் பூஜிக்கப்பட வேண்டிய ஸங்கீதஸ்வாமியான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

542. ஓம் ஞானமயமான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

543. ஓம் மிகச்சிறந்த பாடகராகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

544. ஓம் ஒளிமிகு ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

545. ஓம் ஒளியின் தன்மையாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

546. ஓம் நிலவொளியின் இன்பமான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

547. ஓம் கணீரென கூர்ந்தொலிக்கும் ஸுஸ்வர (இன்னிசை ஒலி) மணியின் நாம இனிமையாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

548. ஓம் டங்காரத்துடன் ஜயகோஷம் செய்யும் ராமபாணத்தின் காக்கும் தன்மையையும் வீரச்சிறப்பினையும் பாடும் தெய்வீகப்பாடகரான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

549. ஓம் நாணேற்றி ராம நாமம் முழங்கும் ஸுஸ்வரமாகிய கோதண்டமேந்திய திருக்கரங்களுடைய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

550. ஓம் வீணையுடன் ஒன்றுதலிலிருக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

551. ஓம் ஆன்மாவின் உண்மையைக் காணச்செய்யும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

552. ஓம் தவத்தலைவராகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

553. ஓம் அறியாமை இருள் நீக்கும் ஆதவனாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

554. ஓம் அறியாமை இருள் நிரம்பிய சிஷ்ய சித்தத்தில் அறிவொளி தூண்டும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

555. ஓம் கடைத்தேற்றும் நற்கீர்த்தனங்களை போதித்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

556. ஓம் தவமிருப்பவர் மனதில் நடமாடும் ப்ரம்மமே ஆன ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

557. ஓம் பிறவிப் பெருங்கடல் தாண்ட இச்சிப்பவருக்கு ஒரே அடைக்கலமான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

558. ஓம் மிகப்புனிதமான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

559. ஓம் விடாமுயற்சியுடன் அயராது உழைப்பவரை உயர்த்தும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

560. ஓம் வேகமாகச் செல்லும் எண்ணங்களாகிய மேகக்கூட்டத்துக்கு விரைகாற்றாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

561. ஓம் மனநிறைவளிக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

562. ஓம் துரியநிலைக்கப்பாற்பட்ட ப்ரம்மமாகிய ஸத்குருவுக்கு நமஸ்-காரம்.

563. ஓம் பவப்பிணியை விரைந்து தீர்க்கும் மருத்துவராகிய ஸத்குரு-வுக்கு நமஸ்காரம்.

564. ஓம் விஷயதாகத்தை (உலகப்பொருட்களில் ஆசையை) ஒழித்து மன அமைதியருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

565. ஓம் வேண்டப்படும் ஸங்கீதச் செல்வத்தை அருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

566. ஓம் உடல்வன்மையும் ஆன்ம ஒளியும் அருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

567. ஓம் புனிதமான நற்கீர்த்தனங்களைப் பிரஸாதமாக அருளும் ஸத்-குருவுக்கு நமஸ்காரம்

568. ஓம் மகிழ்வூட்டும் ஸங்கீத ஞானமருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

569. ஓம் இசை, கூத்து, வாத்தியம் எனும் மூன்றையும் பிரஸாதமாய் அருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

570. ஓம் உலகப்பற்றினை ஒழித்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

571. ஓம் காக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

572. ஓம் உள அடக்கமும் மன அமைதியும் அருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

573. ஓம் தசரதனை மகிழ்விப்போனைத் தன் துதிப்பாட்டால் மகிழ்விக்-கின்ற/ தசரதனை மகிழ்விப்போனைக் காண்பதில் மகிழ்கின்ற ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

574. ஓம் அடியார்களில் முதன்மையான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

575. ஓம் திவ்யவாக்கு எனும் ஆடை அணிந்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

576. ஓம் இரவு பகல் த்யானிக்கப்படும் குருநாதருக்கு நமஸ்காரம்.

577. ஓம் மகிழ்ச்சியற்ற உள்ளவானில் ஒளியூட்டும் கதிரோனாகிய ஸத்-குருவுக்கு நமஸ்காரம்.

578. ஓம் கழலும் ஞானநெருப்பாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

579. ஓம் கெட்ட கனவுகளை அழிக்கின்ற ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

580. ஓம் ஏத்தித் துதிக்கப்பட வேண்டிய நாதகுருவுக்கு நமஸ்காரம்.

581. ஓம் கரைகாணா ஸங்கீத தேவ கங்கையாகிய ஸத்குருவுக்கு நமஸ்-காரம்.

582. ஓம் உறுதியான முடிவுடன் திருவடியில் வீழ்ந்தவரைத் தன்னுடன் சேர்த்துக் கொள்ளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

583. ஓம் உருக்கொண்ட நாத ஒளியாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

584. ஓம் தெய்வீக கானத்தைப் பொழியும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

585. ஓம் ஸ்ரீராமனின் உத்ஸவமூர்த்தியை ஊஞ்சலில் எழுந்தருளச்செய்து இனிமையே ஆகிய பாட்டுகளினால் துதித்துப்பாடிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

586. ஓம் எட்டாத்தன்மையையும் அருமைப்பாடினையும் ஓடச்செய்யும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

587. ஓம் கணீர் ஒலியுடன் பாடிப்பூஜை செய்யும் வரமருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

588. ஓம் அமைதிநிரம்பிய நாதயோகியான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

589. ஓம் நாதயோகத்தில் விரைவாய் நிறைவு காண அருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

590. ஓம் இதயத்தை உருக்கும் கானகங்கையின் தோற்றுவாயான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

591. ஓம் எதிர்மறைகளின் தளையினின்று விடுவிக்கின்ற ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

592. ஓம் இரட்டைகட்கப்பாற்பட்ட (இன்பம்-துன்பம் போன்ற எதிர் இரட்டைகள்) ஞானியாகிய / எதிர்மறைகட்கு அப்பாற்பட்ட ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

593. ஓம் த்வாரகாநாதனாகிய ஸ்ரீக்ருஷ்ணனின் லீலாவிசித்திரத்தை பல்வண்ணப்பாட்டுக்களில் ஆலாபித்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

594. ஓம் இவ்வுலகிற்கும் அவ்வுலகிற்கும் அருள்செயும் ஸ்ரீராமன் திருவடிகளில் பக்தியைத் தூண்டும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

595. ஓம் த்வைதம், அத்வைதம் இத்தத்துவங்களின் பொருளை விளக்கும் மிகப்பல கீர்த்தனங்கள் செய்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

596. ஓம் பூமியினின்றுதித்த ஸீதையின் அன்பனை நிந்தாஸ்துதி செய்து மகிழ்ந்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

597. ஓம் இடையறுவீழ்ச்சியென நாமாவளி மழை பொழிந்த கானமுகிலாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

598. ஓம் அறிவையும், பக்தியையும் வளர்க்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

599. ஓம் ஞானத்துக்கும் பக்திக்கும் இருப்பிடமான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

600. ஓம் ஆழ்ந்த, இனிய மென் அமைதியான குரலுடைய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

601. ஓம் நிலையின்மையை உதறித்தள்ளிய (யாரால் நிலையின்மை உதறித்தள்ளப்பட்டதோ அந்த) ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

602. ஓம் துன்பத்தால் உலர்ந்த மனதைப் புத்துணர்வு பெறச்செய்யும் சிறந்த கானகங்கையான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

603. ஓம் தனது திருக்கரந்தனை இறுகப்பற்றிய, தன்னையே உபாஸிக்கும் பக்தரை நாதோபாஸனையில் நன்கு வழிநடத்தும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

604. ஓம் ஊட்டமளிக்கும், பருகிடவேண்டிய, அமுதைக்கறந்தெடுத்த இனிய கீர்த்தனைகள் மிகப்பல செய்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

605. ஓம் வாரி வழங்கும் இசைச்செல்வந்தரான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

606. ஓம் த்யானிக்கப்பட வேண்டிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

607. ஓம் த்யானத்தினால் அடையக்கூடிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

608. ஓம் ஓங்காரத்தின் உள்ளிருக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

609. ஓம் நாமத்தின் (இறைவன் திருநாமங்களின்) அக்ஷரங்களை ஒலித்த இன்னிசைசங்காகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

610. ஓம் நாதத்தின் சிறப்பை இனிய க்ருதிக்கூட்டங்களில் ஒலித்த கவி-வரராகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

611. ஓம் இருண்ட மனதிற்கு ஞான ஒளியூட்டும் சூர்யனாகிய ஸத்கு-ருவுக்கு நமஸ்காரம்.

612. ஓம் வணங்கப்படவேண்டிய குருதேவருக்கு நமஸ்காரம்.

613. ஓம் நாதத்திற்கு ஏங்கும் ஆன்மாவினால் தேடப்படும் பரம குருவுக்கு நமஸ்காரம்.

614. ஓம் நாதவித்தையை வேண்டுபவருக்கு ஆதாரமான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

615. ஓம் நாதோபாஸகரின் லட்சியமான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

616. ஓம் நாதோபாஸகரின் உயிர்மூச்சான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

617. ஓம் நாதயோகத்தில் உறுதியுடன் விடாது முயலுபவருக்கு முழுமை நிறைவின் மூலமான (விதையான) ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

618. ஓம் நாதோபாஸனையிலேயே நிலைத்துநிற்கும் ஆன்மாவுக்கு ஒரே புகலிடமான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

619. ஓம் நாதோபாஸனையை விரதமாக ஏற்று உள்ளார்ந்து முயலுபவ-ருக்கு விடாமல் உதவி, காத்தருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

620. ஓம் நாதானந்தத்தைப் பொழியும் மங்களமான இனிய கீர்த்தனை மேகமாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

621. ஓம் நாதோபாஸகரின் வாக்கினிமையிலுள்ள ஸத்குருவுக்கு நமஸ்-காரம்.

622. ஓம் நாமகானம் (இறைவன் நாமத்தைப் பாடுதல்) எனும் அமிழ்தச்-

சாற்றைப் பருகுதலில் விருப்புள்ள ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

623. ஓம் நாதத்தோட்டத்தினின்று நாம மலர்களைச் சேகரிக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

624. ஓம் நாம மலர்களால் ஸ்ரீராமனை அர்ச்சித்து ஆனந்தித்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

625. ஓம் நாமத்தின் பெருமையினைப்பாடி மகிழ்வுறும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

626. ஓம் நாராயண, ஹரி என நாமஸங்கீர்த்தனம் செய்து பெருமகிழ்வுற்ற ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

627. ஓம் ஸ்ரீராம தாரக நாமத்தை எப்போதும் துதித்த (யாரால் ஸ்ரீராமதாரக நாமம் எப்போதும் துதிக்கப்பட்டதோ அந்த) ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

628. ஓம் வேத சாஸ்த்ர புராண ஸாரமான நற்கீர்த்தனங்களை அருளியுள்ள ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

629. ஓம் உண்மை பக்தியை எழுப்பும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

630. ஓம் உண்மை பக்தரைக் காக்கும் குருநாதருக்கு நமஸ்காரம்.

631. ஓம் உளச்சோர்வு, வாட்டம் இவற்றினைப் போக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

632. ஓம் உறக்கம், சோம்பல் இவற்றின் எதிரியான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

633. ஓம் நிலைத்ததன்மையை அருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

634. ஓம் என்றுமுள்ள ஆனந்தவடிவான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

635. ஓம் நிலைத்த நாதானந்தத்தை அருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

636. ஓம் தெளிந்த அசைவற்ற சித்தத்தையுடைய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

637. ஓம் தெளிந்த அசைவற்ற சித்தத்தில் உள்ள ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

638. ஓம் தெள்ளத்தெளிந்த சித்தமாகிய வெளியினில் ஒளிரும் நாதப்ரஹ்ம ஒளிப்பிழம்பான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

639. ஓம் தொடர்ந்த, அளவற்ற ஸங்கீத ஆனந்தத்தை அருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

640. ஓம் ஐயமின்றி விடுதலை அளிக்கும் திருவடிகட்கு நமஸ்காரம்.

641. ஓம் வேறுவழியற்ற பக்தைக்கு ஒரே புகலிடமான திருவடிகட்கு நமஸ்காரம்.

642. ஓம் உண்மைபக்தர் இறுகப் பற்றிக்கொண்ட புனிதத் திருவடிகட்கு நமஸ்காரம்.

643. ஓம் என்றும் புதிய பாட்டுக்களில் தனித்திறன் படைத்த ஸத்குரு-வுக்கு நமஸ்காரம்.

644. ஓம் நீலமேக ச்யாமளனான ஸ்ரீராமனின் வடிவழகை வர்ணிப்பதில் விஞ்சுகின்ற ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

645. ஓம் ஸ்ரீராமனைத்துதித்துப் பாடிய (யாரால் ஸ்ரீராமன் துதித்துப் பாடப்பட்டானோ அந்த) ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

646. ஓம் புதிய பாலும் வெண்ணெயும் தனது தெய்வீகமான கானத்து-டன் / புதிய பாலும் வெண்ணெயுமே ஆன தனது தெய்வீக கானத்தை ஸ்ரீராமனுக்கு ஒவ்வொருநாளும் விடியற்காலையில் நிவேதித்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

647. ஓம் நரஸிம்ஹதர்சனத்தினால் புலகமடைந்த ப்ரஹ்லாதன் மூலம் தனது அனுபவத்தினை விவரித்த (விவரிக்கப்பட்ட சுய அனுபவத்தினை உடைய) ஸத்குருநாதருக்கு நமஸ்காரம். [1]

648. ஓம் மன்னர்களிற் சிறந்த ஸ்ரீராமனைப் பாடுவதில் ஈடிணையற்ற பாகவதோத்தமரான **ஸத்குரு ஸ்ரீத்யாகராஜஸ்வாமிக்கு மீண்டும் மீண்டும் நமஸ்காரம்.**

649. ஓம் தனது அடிச்சுவட்டினையே பின்பற்றுவருக்கு நாத வளர்ச்சி, முழுமை இன்பம் இவற்றை அருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

650. ஓம் நிராசையை நீக்குகின்ற ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

651. ஓம் கர்மாவினின்று விடுபட்டு முக்தியடைதலருளும் ஞானாசார்ய-னான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

652. ஓம் நிலைப்பேறளிக்கும் நாதோபாஸனையாகிய நற்பேறருளும் ஸத்-குருவுக்கு நமஸ்காரம்.

653. ஓம் இயற்கையான ஸங்கீதவரமருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

654. ஓம் பேரின்பமளிக்கும் நாதயோக ஆசார்யனான ஸத்குருவுக்கு நமஸ்-காரம்.

655. ஓம் முழுநிறைவுடை வாக்கேயகாரராகிய (இசைப்பாடல்கள் இயற்-றிய) ஸத்குருவுக்கு நமஸ்காரம்

656. ஓம் ஸுஸ்வர (இன்னிசையொலி) சந்தனம் பூசப்பட்ட, பக்தியின் உருவமாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

657. ஓம் விடாது முயலும், அறிவாற்றல் குறைந்த பக்தரைக் கைதூக்-கிவிடும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

---

1 ப்ரஹ்லாத பக்தி விஜயம்.

658. ஓம் பரமாத்மஞானத்தை எழுப்பும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

659. ஓம் மேம்பட்ட, உயர்ந்த குருவுக்கு நமஸ்காரம்.

660. ஓம் பேரின்ப ஒளிச்சுடராகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

661. ஓம் பேரின்பக்கடலாகிய ஸ்ரீராமனைப் பாடும் பேரின்பம் நிறைகட-லாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

662. ஓம் அவ்வுலகிற்கு அருள் செய்யும் ஸ்ரீராம பஜனை, கானம் இந்-நெறியில் முன்னோடியான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

663. ஓம் பக்தியற்ற ஸங்கீத ஞானத்தைப் புறக்கணித்த (யாரால் பக்தியற்ற ஸங்கீதஞானம் புறக்கணிக்கப் பட்டதோ அந்த) ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

664. ஓம் ஸ்ரீஸீதாராமனின் அர்ச்சாமூர்த்தியை (விக்ரஹ உருவை)ப் பூஜித்த (யாரால் ஸ்ரீஸீதாராமனின் அர்ச்சாமூர்த்தி பூஜிக்கப்பட்டதோ அந்த) ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

665. ஓம் பரப்பப்பட்ட நாமானந்த ஒளியுடைய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

666. ஓம் நாமகீர்த்தனத்தின் இன்பம் பெருக்கெடுத்த ஸ்வானுபவமுடைய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

667. ஓம் ஊடுருவிப் பரந்த பக்தி நறுமணத்தை உடைய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

668. ஓம் சூழப்பட்ட ஸ்ரீராமபக்தி ஒளியினையுடைய ஸத்குருவுக்கு நமஸ்-காரம்.

669. ஓம் ஸ்ரீராமமூர்த்தியைக் கட்டித் தழுவிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

670. ஓம் தேடுபவருக்குக் கண்முன் தோன்றலாகிய ஸத்குருவுக்கு நமஸ்-காரம்.

671. ஓம் மாயையினால் சூழப்பட்டு, சுற்றிச் சுழன்று திண்டாடுமிச்சிஷ்-யரை நாதோபாஸனையில் தொடர்ந்து வழிகாட்டி நெறிப்ப-டுத்தும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

672. ஓம் நன்கு உபாஸிப்பவருக்கு என்றும் நிறை மங்களத்தைத் தரும் ஸங்கீதாமுதத்தைப் பொழியும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

673. ஓம் பாதத்தில் வீழ்ந்தவரைத் தூய்மைப்படுத்தும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

674. ஓம் தூய்மையூட்டும் நாமதீர்த்தத்தைத் தெளிக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

675. ஓம் திருவடி ஸ்பர்சனத்திற்கு ஏங்கும் ஆத்மாவைக் கட்டி அணைத்-துக்கொள்ளும் இதயங்கனிந்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்

676. ஓம் தாகங்கொண்ட பக்தைக்குத் தன் கானாமுதத்தைப் பருகிடச்-செய்யும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

677. ஓம் பொங்கும் நாதாமுதத்தின் பெருக்கான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

678. ஓம் அமுதைப்பொழியும் இசை இன்பக்கொண்டலான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

679. ஓம் முழுமையாக எழும்பும் நாதாமுத அலையான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

680. ஓம் புனிதப்பெயர் புகழ் படைத்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

681. ஓம் புஷ்ப நறுமணம் கொண்ட எண்ணமலரால் அர்ச்சிக்கப்பட்ட ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

682. ஓம் பூஜைக்குரிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

683. ஓம் பூஜிப்பவரின் ஒரே உறவினரான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

684. ஓம் பற்றிய பக்தைக்குக் காப்பளிக்கும் மங்களமான திருவடிகட்கு நமஸ்காரம்.

685. ஓம் மென்மையான பக்திபுஷ்பத்தினால் அர்ச்சிக்கப்பட்ட திருவடிகட்கு நமஸ்காரம்.

686. ஓம் தனித்திறம் படைத்த இன்கவித்வமருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

687. ஓம் முன்னோர் அளித்த செல்வமாகப் பெற்ற ஸ்ரீஸீதாராமன் திருவுருவினை அன்றாடம் பூஜித்து ஆராதித்துப் பாடுவதில் ஈடுபட்ட அவதார புருஷராகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

688. ஓம் புனிதமான பாகவதோத்தமராகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

689. ஓம் பலவகைப் பாட்டுக்களில் நாமத்தின் பெருமை மீண்டும் மீண்டும் வற்புறுத்திக் கூறப்படுகின்ற வாக்கின் ஒளியான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

690. ஓம் பக்தருக்கு புத்துயிரூட்டும் அமுதமயமான கீர்த்தனங்களை உடைய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

691. ஓம் நாமத்தின் பெருமையைப் பாடிமுழங்கிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

692. ஓம் ஒலிக்கப்பட்ட கமகத்தில் உள்ள ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

693. ஓம் எதிரில் தோன்றிய நாத தெய்வமான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

694. ஓம் ப்ரணவ (ஓங்கார) ரூபத்தில் எங்கும் பரந்து விரிந்துள்ள நாத சக்தியான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

695. ஓம் எப்போதும் நினைந்து த்யானிக்கும் பக்தர் முன் புலப்படும் நாதத்தோன்றலான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

696. ஓம் சுடர்விடும் நாத ஒளியான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

697. ஓம் காத்திருக்கப்படுகின்ற ஸங்கீத குருவுக்கு நமஸ்காரம்.

698. ஓம் வணங்கிய பக்தரைக் காக்கின்ற ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

699. ஓம் உயிர் மூச்சினை அருளும் / கவிதை அருட்கிளர்ச்சி அருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

700. ஓம் விதியின் தளையினின்று விடுவிக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

701. ஓம் ப்ராணநாதனாகிய ஸ்ரீக்ருஷ்ணனின் லீலைகளை மணியோசையெனப்பாடிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

702. ஓம் மிகுந்த அன்புக்குரிய குருதேவருக்கு நமஸ்காரம்.

703. ஓம் செயல் வெற்றி மகிழ்வருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

704. ஓம் அன்பு ததும்பும் தெய்வீகப் பார்வையினால் பக்தையைச் சூழும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

705. ஓம் பஜனை ஆனந்தத்தால் அசைந்தாடுகின்ற, ஒளிவட்டத்தால் சூழப்பட்ட ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

706. ஓம் ஸ்ரீராமனது மிகுந்த வடிவழகைப் பாடுவதில் நிகரற்ற ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

707. ஓம் தெளிக்கப்படவேண்டிய நாமாமுதம் கொண்ட குறையா அக்ஷயபாத்திரமாகிய வகைவகையான கீர்த்தனங்கள் செய்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

708. ஓம் உயர்ந்த தத்வார்த்தங்கள் நிரம்பிய கான வெள்ளமாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

709. ஓம் உயர்வருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

710. ஓம் அறிவுவளம் நிறை கவியரசராகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

711. ஓம் நாமாமுதத்தில் முழுகித் திளைக்கும் கானானந்த வடிவான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

712. ஓம் அரவரசப் பள்ளிகொண்டோனை பஜனைசெய்த இசை அரசராகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

713. ஓம் ராமானந்தம் கனிந்து கீதக்கிளைகளுடன் விளங்கும் நாதமே வேரான இசைஅரசமரமாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

714. ஓம் நுரையீரலினை நிரப்பும் ஸுஸ்வரமெனும் தெய்வீக நறுமணக் காற்றாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

715. ஓம் ராகமாம் அமிழ்தின் தொடர்பெருக்காகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

716. ஓம் நிலைத்து ஊடுருவும் பார்வையினால் பக்தைக்கு அருள் புரியும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

717. ஓம் அன்பினால் தன்னுடன் பிணைக்கப்பட்டவருக்கு தன்னுடன்

ஒன்றும் அருள் புரியும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

718. ஓம் சிறுவன் ராமனின் திருவிளையாடல்களைத் தன்னுள் அனுபவித்த திருவார்ந்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

719. ஓம் துளஸி, வில்வம் முதலிய இலைகளும், பல்வகை நறுமலர்களும் நாம மலர்களும்கொண்டு ஸ்ரீராமனைப் பூஜித்து அர்ச்சனை செய்யும் உவகை வடிவான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

720. ஓம் கூரிய அறிவருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

721. ஓம் அறிவுக்கப்பாற்பட்ட ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

722. ஓம் மிகப்பெரும் புகழுடைய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

723. ஓம் உயர்பெரும் அறிவுடைய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

724. ஓம் அறிவுணர்வுக்கப்பாற்பட்ட ஸ்ரீராமனை மிக மென்மையான இனிய பாட்டினால் திருப்பள்ளி எழுப்பும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

725. ஓம் ப்ரஹ்ம ஒளியான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

726. ஓம் ப்ரஹ்ம ஞானத்தினை அருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

727. ஓம் பக்தியினைப் பிச்சையாக அருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

728. ஓம் பக்திக்கடலின் கரைகாணச் செய்விக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

729. ஓம் பக்த பாபத்தினைச் சாம்பலாக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

730. ஓம் பக்த துன்பம், கவலைகட்கு முடிவான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

731. ஓம் பக்தமானத்தைக் காத்தருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

732. ஓம் பக்தருக்கு நன்மையருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

733. ஓம் பக்தையால் இறுகப்பற்றப்பட்ட திருவடிகட்கு நமஸ்காரம்.

734. ஓம் பக்தையின் இதயக்கோவிலில் உறுதியாகப் பிரதிஷ்டை செய்யப்பட்ட மங்களத்திருவடிகட்கு நமஸ்காரம்.

735. ஓம் பக்தையின் இதயத்தைத் தனது மங்களமான இருப்பிடமாகக் கொண்ட ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

736. ஓம் பக்தையின் இதயக்கோயிலில் ஒளிரும் நாத விளக்குச் சுடரான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

737. ஓம் இறைவன் அர்ச்சனை, இசை ஆராதனம் இவற்றில் ஈடுபட்டுத் தாரகநாம இன்பம் பொங்கி வழிகின்ற ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

738. ஓம் இறைவன் நாமத்தை இனிது பாடுவதிலேயே ஈடுபட்ட ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

739. ஓம் பக்தி உணர்வின் அனுபவ மயமான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

740. ஓம் பக்தியோக நெறியில் விழிப்புற்ற மனதுடைய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

741. ஓம் பக்தியினால் நறுமணம் பெற்ற இத்துதிமலர்களால் மகிழ்வுற்ற ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

742. ஓம் பக்தையின் அநுராக (அன்பு) வெள்ளத்தால் முழுக்காட்டப்படும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

743. ஓம் பக்தையின் வாழ்வுக்குடத்தை ஸங்கீதத்தேனால் நிரப்புகின்ற ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

744. ஓம் மங்களம் செய்யும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

745. ஓம் காத்தருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

746. ஓம் தெளிந்த கணீர் என ஒலிக்கும் குரலுடைய, ஒளிமிக்க ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

747. ஓம் பேரின்பமருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

748. ஓம் பிறவிப்பிணிக்கு முறிவுமருந்தான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

749. ஓம் பிறவிக்கப்பாற்பட்ட ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

*750. ஓம் பக்தி உணர்வுமிக்க மனதில் கருத்துருக் கொள்ளப்படும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

751. ஓம் இதயபூர்வ உணர்வெனும் புஷ்பத்தால் பூஜிக்கப்படும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

752. ஓம் ஒளிவட்டத்தால் சூழப்பட்ட ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

753. ஓம் ஒளிரும் ஸ்வரமூர்த்தியான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

754. ஓம் பிச்சையாக வேண்டப்பட்ட ஸ்வர வித்தையை அருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

755. ஓம் அன்புணர்வில் தோய்ந்த, பக்தியின் மிக்க நறுமணம் பொருந்திய குறையாச் செல்வமாகிய மிகப்பல கீர்த்தனமலர்களை அருளிச் செய்துள்ள ஸத்குருநாதருக்கு நமஸ்காரம்.

756. ஓம் மிக்க ஒளிகொண்ட ஸ்ரீத்யாகராஜ ஸத்குருஸ்வாமிக்கு மீண்டும் மீண்டும் நமஸ்காரம்.

757. ஓம் ஸங்கீதானந்தம் நிரம்பிய ஸத்குருஸ்வாமிக்கு நமஸ்காரம்.

758. ஓம் சுழன்று சுழன்றியங்கும் மனதை ஒருமுகப்படுத்தும் இனிய ச்ருதியான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

759. ஓம் ஒளிவீசும் ஸங்கீத ஸூர்யனான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

760. ஓம் மங்களமான கானவடிவான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

761. ஓம் அழகினிய குரலுடைய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

762. ஓம் மிக அழகிய இன்னிசையொலி இன்ப அலையான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

763. ஓம் நாமப்பூங்கொத்துக்கள் பூத்துக்குலுங்கும் தெய்வீக கானக்கொடியான ஸத்குருவுக்கு நமஸ்காரம்

764. ஓம் மனமாம் கொடிவீட்டினில் மறைந்துள்ள மங்களப்பாடகராகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

765. ஓம் வேண்டப்படும் ஸங்கீதமாகிய பலனருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

766. ஓம் உள்ளக்கட்டுப்பாட்டினை வற்புறுத்திய முனிவராகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

767. ஓம் மந்த்ரத்தை உபதேசிக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

768. ஓம் இறைவனிடம் மிக்க ஈடுபாடு கொண்ட ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

769. ஓம் தீவினையை திசை திருப்பும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

770. ஓம் மங்களத்தை உண்டாக்கும், இன்குரலுடைய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

771. ஓம் தாராளமாய் அளிக்கும் இசைச் செல்வந்தராகிய/மிக மதிப்புடைய இசை மாணிக்கமாகிய /இன்னிசைக்குப் புகழ்பெற்ற ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

772. ஓம் சிந்தித்துப் பின்பற்ற வேண்டிய தத்வார்த்தங்கள் நிரம்பிய இனிய கீர்த்தனைகள் மிகப்பலவற்றை அருளியுள்ள, ஸங்கீதத்தின் முழுமை நிறைவு பெற்ற அவதாரமாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

773. ஓம் மிக்க மேம்பட்ட ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

774. ஓம் போற்றிப் பூஜிக்கப்படும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

775. ஓம் மேம்பட்ட, உயர்மகிழ்வுள்ள பாட்டுக்கள் பற்பல செய்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

776. ஓம் தன்மானம் நிறைந்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

777. ஓம் தனதிதயத்தில் நடமாடி ஒளியூட்டும் ஸ்ரீராமனின் திருவுருவை இசைபாடி இன்புற்ற ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

778. ஓம் தேடுபவர் உள்ளத்தில் பளிச்சிடும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

779. ஓம் தேடுபவரின் தூய்மைப்படுத்தப்பட்ட உள்ளத்துக்கு அழகூட்டும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

780. ஓம் திருவுற்றோனின் உற்றாராகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

781. ஓம் இனிமைமிகுமொழியுடைய ஸ்ரீராமன் பூஜிக்கப்பட்ட, இனிமை-யேஆன பாட்டுக்களை இயற்றிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

782. ஓம் இனிய நாமம் கலக்கப்பட்ட ஸ்வரம், ராகம், லயம் இவை-யாகிய அமுதச்சாற்றினைப் பருகி இன்புறும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

783. ஓம் மீன் முதலான பத்து அவதாரங்களின் பெருமையை மிக அழ-காகப்பாடிய கானாவதாரமாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்

784. ஓம் தூயோரின் உள்ளத்தை இருப்பிடமாகக் கொண்டோனின் பெரு-மைகட்கு இருப்பிடமான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

785. ஓம் முரகரர்களை அழித்தோனைக் கவர்ந்த ஹரிபக்தராகிய ஸத்-குருவுக்கு நமஸ்காரம்.

786. ஓம் முக்தியினை இச்சிப்பவரின் அடைக்கலமான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

787. ஓம் மூலாதாரத்தினின்றுதிக்கும் ஓங்காரநாதமே ஆன ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

788. ஓம் வீட்டுப்பேறுன / வீட்டுப் பேரருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

789. ஓம் மென்மையான இன்னிசை ஒலியின் இனிமையான ஸத்குரு-வுக்கு நமஸ்காரம்.

790. ஓம் மேருவுக்குச் சமமான மேதையுடன் ஒளிரும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

791. ஓம் மகிழ்வூட்டும் நாதகுருவுக்கு நமஸ்காரம்.

792. ஓம் மோஹன வடிவுடையோன் மேல் கொண்ட மோஹமே அடை-யாளமாயுள்ள ஸதகுருவுக்கு நமஸ்காரம்.

793. ஓம் முக்தியளிக்கும், பற்பல ராகங்களிலமைந்த இனிய கீர்த்தனை-களை இயற்றிய ஸத்குருவுககு நமஸ்காரம்.

794. ஓம் விடுவிக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

795. ஓம் அமைதியாய் தியானித்தலால் அடைய வேண்டிய ஸத்குரு-வுக்கு நமஸ்காரம்.

796. ஓம் சோர்வுற்ற மனதிற்கருமருந்தான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

797. ஓம் மனஅடக்கமுடைய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

798. ஓம் சிறநத துறவியான ஸத்குருவுககு நமஸ்காரம்.

799. ஓம் புகழ் பெற்ற ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

800. ஓம் சிறப்பினை அருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

801. ஓம் வருதலும் போதலுமான காலப்போக்கிற்கப்பாற்பட்ட ஸதகுரு-வுக்கு நமஸ்காரம்.

802. ஓம் பரம்பொருளுடன் ஒன்றிய தூயராகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

803. ஓம் பெருக்கெடுத்தோடும் கான கங்கையாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

804. ஓம் மனதை ஒருமுகப்படுத்தி த்யானிக்கப்படவேண்டிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

805. ஓம் யோகஸாரமான நாதவித்தைக் கடலாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

806. ஓம் தகுந்த உபதேசமளிக்கும் குருதேவருக்கு நமஸ்காரம்.

807. ஓம் அன்பும் பக்தியுமே உருவெடுத்த, ராகக்கடவுளான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

808. ஓம் இன்குரலுடைய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

809. ஓம் ஸ்ரீராமனின் அழகினை கணீரென ஒலிக்கும் குரலில் பாடிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

810. ஓம் ரகுநந்தனனை (ரகுவம்சத்தை மகிழ்விப்போனை) இன்பமான இனிய பாட்டுக்களால் வணங்கிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

811. ஓம் ரங்கசாயியின் தெய்வீக வடிவை இதய அணியாகக் கொண்ட/ ரங்கசாயியின் தெய்வீக வடிவைத் தன் இதயத்தால் அணிசெய்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

812. ஓம் வெள்ளியங்கிரியோனால் மலைமகளுக்குக் கூறப்பட்ட ஸ்வரக் கடலின் மறைமுக உண்மைகளை வென்ற ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

813. ஓம் ரமாரமணன் மகிழ்ந்திடும் மனதையுடைய / ரமா ரமணனில் மகிழ்வுற்ற மனதையுடைய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

814. ஓம் ராமசந்திரனின் அன்புக்குரிய இசைஞராகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

815. ஓம் ராமனாகிய தெய்வத்தை எளிதில் அடைந்த சிறந்த பக்தராகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

816. ஓம் ராமநாமமாகிய காக்கும் மந்த்ரத்தை உபதேசிக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

817. ஓம் அரசர்க்கரசரின் உயரணியாகிய ஸ்ரீராமனைப் பாடுவதில் ஈடுபட்ட பாகவத சிரோமணியான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

818. ஓம் இசை அன்பனான ஸ்ரீராமனின் அன்பரான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

819. ஓம் ராகத்தையே வடிவாகக்கொண்ட ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

820. ஓம் விருப்பு வெறுப்பற்ற ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

821. ஓம் ராம, ராம, கோவிந்த, முகுந்த என நாம ஸங்கீர்த்தனத்தின் ஆனந்தமேயான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

822. ஓம் ராகமெனும் (அன்பு, இசை எனும்) பூச்சினை ஸ்ரீராமன்மேல் பூசிய/ ராகமெனும் பூச்சுக் கொண்ட தானே ஸ்ரீராமனுக்குப் பூச்சாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

823. ஓம் ஒளிபடைத்த கண்ணிணையுடைய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

824. ஓம் ராகமெனும் ஒளிக்கிருப்பிடமான, ராமனாகிய ஒளிக்கிரணங்களை மாலையாகப் பூண்ட ஞாயிறாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

825. ஓம் அழகொளி முகத்தோனாம் ஸ்ரீராமனின் வடிவழகினை அழகும் அன்பும் மிளிரும் ராகத்தினால் ஒளிரச்செய்யும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

826. ஓம் ராகத்தின் அழகும் ஒளியும் ஒருருப்பெற்ற ஸத்குருவுக்கு நமஸ்-காரம்.

827. ஓம் ஒளிரும் ராகக்கடவுளான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

828. ஓம் மயிர்கூச்சுண்டாக்கும் ஸ்ரீராமனுக்கு அஞ்சலியாகப் பாட்டுக்கள் செய்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

829. ஓம் லக்ஷ்ய குருவான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

830. ஓம் லக்ஷ்மீரமணன் இன்புறும் வகையில் இன்னிசை ஒலித்த ஸத்-குருவுக்கு நமஸ்காரம்.

831. ஓம் லக்ஷ்மணனுடன் விளங்கும் ஸ்ரீஸீதாராமனின் திருவுருவை இடை-விடாது இசை மூலம் ஆராதிப்பதில் ஈடுபட்ட ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

832. ஓம் லக்ஷணங்கள் நிரம்பப்பெற்ற ஸ்ரீராமனைப் பிரதக்ஷிணம் செய்-யக்கூப்பிடும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

833. ஓம் பற்றிக்கொள்ளவேண்டிய குருதேவருவுக்கு நமஸ்காரம்.

834. ஓம் இறுகப்பற்றிப் பூஜிப்பவரைக் காக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

835. ஓம் அறிவுத்திறமிக்க ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

836. ஓம் தாளம் கூத்தாடும், உணர்ச்சி பெருக்கெடுத்தோடும், பண்ணி-னால் வண்ணமூட்டப்பட்ட பாட்டுகள் பற்பல இயற்றிய கலைவளமுடைய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

837. ஓம் லயசுத்தத்தை அருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

838. ஓம் தன்னுள் ஒன்றும் வரமருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

839. ஓம் தனதருமை ஸ்ரீராமமூர்த்தியை லாலி (தாலாட்டு) பாடிக்கொஞ்சும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

840. ஓம் வனப்புமிகு ஸ்ரீராமசந்திரனின் மேல் கொண்ட அன்புமயமான

ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

841. ஓம் கான வடிவில் நாமத்தின் பெருமையைப் பொறித்த நாதவடி-வான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

842. ஓம் விளையாட்டாக அவதரித்த ஸ்ரீராமன் மேல் அன்பிற்சிறந்த குருநாதருக்கு நமஸ்காரம்.

843. ஓம் விளையாட்டில் கைதேர்ந்த ஸ்ரீக்ருஷ்ணனைக் கொஞ்சும் பாட்-டில் கைதேர்ந்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

844. ஓம் உலகைத் திறம்படக்காக்கும் ஸ்ரீராமனைப்பாடிப் புகழ்ந்த ஸத்-குருவுக்கு நமஸ்காரம்.

845. ஓம் தாமரைக்கண்ணனை நிந்தாஸ்துதி செய்து ஆனந்திக்கும் ஸத்-குருவுக்கு நமஸ்காரம்.

846. ஓம் வணங்கப்படவேண்டிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

847. ஓம் வணங்குபவருக்குச் சிறந்த கானவரமருளும் ஸத்குருவுக்கு நமஸ்-காரம்.

848. ஓம் தாமரைக்கண்ணனின் ஜபமே நவநிதியாகும் என்றுரைத்த ஸத்-குருவுக்கு நமஸ்காரம்.

849. ஓம் ராமநாமம உட்செறிந்த தேன்குரல் படைத்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

850. ஓம் விரிந்த நாதமலராகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

851. ஓம் தூயநாமமலர்களின், பாட்டெனும் புஷ்பார்ச்சனையில் மகிழும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

852. ஓம் களங்கமில்லா நிலவான ராமசந்திரனைப்பாடுவதில் சந்திரனான (தலைசிறந்த) ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

853. ஓம் தூய இதயத்தையுடைய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

854. ஓம் விரக்தியையே (பற்றின்மையையே) உருவாகக்கொண்ட ஸத்கு-ருவுக்கு நமஸ்காரம்.

855. ஓம் நம்பிக்கை வைக்கவேண்டிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

856. ஓம் உலகியற்பொறிப்புகளை அழிக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

857. ஓம் புகழ்பெற்ற ராம பக்தராகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

858. ஓம் வேதப்பொருள் புலப்படும் நாத நூலாகிய ஸத்குருவுக்கு நமஸ்-காரம்.

859. ஓம் வெகுதூரம் பரவிய இசையொளியாகிய ஸத்குருவுக்கு நமஸ்கா-ரம.

860. ஓம் வீணை கானத்தில ஊடுருவிப்பரந்து கலந்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

861. ஓம் அழகிற் சிறந்த ஸ்ரீராமனை அழகிற்சிறந்த பாடல்களால் புகழும் தலைசிறந்த பக்தராகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

862. ஓம் வேங்கடேசன் திருநாமமெனும் ஏணிமூலம் நன்னெறியில் ஏற்றுவிக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

863. ஓம் வேதசாஸ்திரங்களின் தன்மை, உண்மைப்பொருள் இவற்றினை நாத வடிவில் அறியச் செய்யும் ஸத்குருநாதருக்கு நமஸ்காரம்.

**864. ஓம் வேதாந்தத்தை நன்கறிந்த நாதயோகியான ஸத்குரு ஸ்ரீத்யாகராஜ ஸ்வாமிக்கு மீண்டும் மீண்டும் நமஸ்காரம்.**

865. ஓம் தன்னை அடைந்த உபாஸகரை உய்விக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

866. ஓம் ஒலியாகும் ப்ரம்மனாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

867. ஓம் ஒலிக்கப்பாற்பட்ட / விவரிக்க இயலாத ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

868. ஓம் அமைதியும் வீட்டுப்பேறும் அளிக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

869. ஓம் அமைதியான மனமாம் இன்பமான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

870. ஓம் பொன்னில் பொறிக்கப்படவேண்டிய இசைப்புகழான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

871. ஓம் சிஷ்ய உள்ளத்துன்பத்தினாலேயே அர்ச்சிக்கப்பட்ட ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

872. ஓம் சிஷ்யரிடம் பரிவுடைய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

873. ஓம் சிஷ்யர் குற்றங்களை மன்னிக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

874. ஓம் சிஷ்ய அஹங்காரத்தினை அழிக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

875. ஓம் சிஷ்ய மன இருளைப் போக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

876. ஓம் மங்களத்தை ஆசீர்வதித்தருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

877. ஓம் மங்களம் செய்யும், தெய்வீகமான கானம் இசைக்கும், விரும்பப்படும் குரலுடைய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

878. ஓம் சிவநாமத்தை பஜனை செய்து வில்வத்தால் அர்ச்சனை செய்து இதயத்தாமரையால் பூஜிக்கத் தூண்டும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

879. ஓம் கேட்க மிகவும் விரும்புபவருக்குச் சலுகையாக இன்குரலை ஒலிக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

880. ஓம் தூய்மையின் அவதாரமான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

881. ஓம் மங்களங்கள் நிறை ஸ்ரீராமனின் திருநாமங்கள் நிறைந்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

882. ஓம் சூரனாகிய ஸ்ரீராமனைப் பாடுவதில் ஈடுபட்ட இன்னிசையொலியின் உருவமான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

883. ஓம் ச்ருங்கார குணத்தின் இருப்பிடமான ஸ்ரீராமனிடம் பக்திக்கு இருப்பிடமான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

884. ஓம் பைந்நாகப் படுக்கையோனைப் பாடுதலில் ஒன்றிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

885. ஓம் தளர்ச்சியினைப் போக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

886, ஓம் துன்பப்பனிக்கு சூர்யனான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

887. ஓம் சோகத்தினின்றுதித்த ச்லோகத்தில் பிரியமுள்ள ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

888. ஓம் உலர்ந்த உள்ளத்துக்குப் புத்துயிரளிக்கும் ஸுஸ்வரத்தைத் தெளிக்கும் ஸங்கீதமாம் குளிர்தென்றலாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

889. ஓம் அழகிய ஸப்தஸ்வரங்களெனும் வானவில்லாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

890. ஓம் வீரமும் பெருந்தன்மையும் நிரம்பிய ஸ்ரீராமனின் இன்குணங்களைப்பாடி மயங்கிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

891. ஓம் நீலவண்ண மேனியழகுடை ஸ்ரீராமனைப் புகழ்ந்து பாடிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

892. ஓம் அக்கறையுடன் முயலும் சரணடைந்தவருக்குத் தன் தர்சன பலனருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்

893. ஓம் முயன்று உழைப்பவருக்கு ஸ்வர வித்தையின் முழுமை நிறைவினை அருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

894. ஓம் சரணடைந்தவரை முழுதும் காக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

895. ஓம் செவியை மயக்கும் ஸுஸ்வர இனிமையிலுள்ள கடவுளான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

896. ஓம் கேட்பதே பேரின்பமான இன்குரலுடைய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

897. ஓம் விரைந்தோடும் ஸங்கீதப்பெருக்கான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

898. ஓம் மிக்க புகழுடைய இசை மேதையாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

899. ஓம் கேட்பதற்கினிய ச்ருதியே வடிவாய்க் கொண்ட / கேட்பதற்கினிய வேதமே உருககொணட ஸதகுருவுக்கு நமஸ்காரம்.

900. ஓம திருவருளும ஸதகுருவுக்கு நமஸ்காரம்.

901. ஓம் ஸ்ரீகாந்த, ஸ்ரீகர என்று இனிது ஒலிக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

902. ஓம் திருவுக்கு மகிழ்வூட்டும் வடிவுடையோன் மகிழத்தக்க பாட்டுக்களைச் செய்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

903. ஓம் ஸ்ரீஹரி கீர்த்தனம் செய்து உடல், ஐம்புலன்கள் இவற்றின் நினைவகன்று "அவனே நான்; நானே அவன்" எனும் உணர்விலேயே ஸமாதியிலாழ்ந்து விடும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

904. ஓம் ச்ருதி, லயம் இவற்றையே உருவாகக்கொண்ட ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

905. ஓம் ச்ருதியோடிணைந்து இன்பமூட்டும் இன்னொலி இசையெனும் புஷ்பத்தினால் அர்ச்சிக்கப்பட்ட ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

906. ஓம் மேன்மை செய்யும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

907. ஓம் செவிக்கு உவகையூட்டும் வாக்கினிமை படைத்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

908. ஓம் தடுமாறி முயல்பவருக்குக் கைகொடுத்து முன்னேற்றிவிடும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

909. ஓம் தன்னைப்பற்றிக்கொண்ட, நாதோபாஸனையை விரதமாகக் கொண்டவருக்கு விருப்பின் நிறைவருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

910. ஓம் இத்துதியில் இருக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

911. ஓம் சலனமற்ற மனதில் தோன்றும் நாதப்ரஹ்மனான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

912. ஓம் காமம் முதலான அறுவகைப் பகைவரை ஒழிக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

913. ஓம் ஸங்கீதமாகிய செல்வத்தை அடைவிக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

914. ஓம் ஸங்கீத பரமாசார்யராகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

915. ஓம் ஸங்கீதத்தின் உட்கருவான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

916. ஓம் ஏழு இன்னிசை ஒலிகளின் முழுமையான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

917. ஓம் ஏழு இன்னிசை ஒலிகளின் உட்புகுந்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

918. ஓம் ஏழு இன்னிசை ஒலிகளில் சஞ்சரிக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

919. ஓம் இன்னிசையின் அவதாரமான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

920. ஓம் ஸங்கீத யோகத்தின் உச்சநிலையிலுள்ள ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

921. ஓம் ஸங்கீதஞானம், பக்தி இவற்றின் எல்லையான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

922. ஓம் ஸத்ஸங்கம் எனப்படும் நற்றுணையான ஸத்கீர்த்தனங்கள் மிகப்பல அருளிச்செய்துள்ள ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

923. ஓம் ஸத்கீர்த்தனங்களினால் நன்னெறி போதித்த மகரிஷியான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

924. ஓம் உண்மை பக்த மனதில் நன்கு நிலைநாட்டப்பட்ட ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

925. ஓம் ஸங்கீதத்தை வழிபடும் இவ்வாத்மாவின் பக்தியின் மொத்த உருவின் பிரதிபிம்பமாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

926. ஓம் இனிய பாட்டே மொழியாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

927. ஓம் ஸங்கீத ஞானத்தை (இசை அறிவை)ப் பிச்சையாக அருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

928. ஓம் இசையறிவுக் கடலின எல்லையை அடைவிக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

929. ஓம் கைகுவித்து வணங்கும் பக்தையுள்ளுள் எப்பொழுதும் ஒளிரும் உண்மையாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

930. ஓம் தன்னையே முழுமையாகச் சரணடைந்தவருக்கு எல்லாமான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

931. ஓம் உண்மை பக்தரின் வாழ்வின் உயிர்மூச்சான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

932. ஓம் (குருவின் பாதத்தில்) எல்லாவற்றையும் ஸமர்ப்பித்துப் பாதத்தை இறுகப்பற்றியவரைக் காக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

933. ஓம் பிறவிப் பிணியில் இன்னலுறும் ஆத்மாவுக்கு ஸ்ரீராமதாரக மந்த்ரத்தை மருந்தாக இடும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

934. ஓம் பிறவிப்பிணியெனும் கருமுகிலின் தங்க எல்லைக்கோடான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

935. ஓம் பிறவிப் பெருங்கடலில் முழுகுபவருக்குத் தோணியான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

936. ஓம் ஸப்தஸ்வரத்துடுப்புக்களால் ராமநாமமெனும் ஓடத்தின் மூலம் பிறவிக்கடலைக் கடக்க வைக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

937. ஓம் எல்லாவித . ஒலிகளும் நிறைந்த இசைக்கடலான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

938. ஓம் எல்லாவித செல்வமுமான ஸ்ரீராமனைப் பாடுதலே செல்வம் (தேடும் பொருள்) என ஒலித்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

939. ஓம் எல்லா உலகினையும் காக்கும் ஸ்ரீராமனைத் தன் உளக்-

கோயிலில் நன்கு நிலைப் படுத்திய (யாரால் உளக்கோயிலில் எல்லா உலகையும் காக்கும் ஸ்ரீராமன் நிலைப்படுத்தப்பட்-டானோ அந்த) ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

940. ஓம் அனைத்துலகினையும் மகிழ்விக்கும் ஸ்ரீராமனை இனிதுபாடி மகிழ்விக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

941. ஓம் எல்லா மந்த்ர, தந்த்ர வடிவான ஸ்ரீராமனின் தாரக மந்த்ரப்ரி-யரான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

942. ஓம் எல்லா வேதங்களின் ஸாரமான ஸ்ரீராமனை பற்றிய அறிவின் ஸாரமான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

943. ஓம் உண்மை, நல்லொழுக்கம் இவற்றின் வடிவான ஸ்ரீராமனை பக்தி செய்தலின் உண்மை வடிவான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

944. ஓம் உண்மையுடன் இணைந்த ஸ்ரீராமனிடம் இணைந்த ஸத்குரு-வுக்கு நமஸ்காரம்.

945. ஓம் தூயசித்தம் படைத்த ஸ்ரீராமனை அண்டிய சித்தத்தையுடைய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

946. ஓம் அனைத்துக்கும் ஸாரமான ஸ்ரீராம அனுபவத்தின் ஸாரமான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

947. ஓம் அனைத்துக்கோள்கட்கும் ஆதாரமான ஸ்ரீராமனைப் பாடுதற்கு ஆதாரமாயுள்ள ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

948. ஓம் அனைத்துயிர்கட்கும் வாழ்வளிக்கும் ஸ்ரீராமனின் நாமத்தை விடாது ஸ்மரித்தலே வாழ்வாகக் கொண்ட ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

949. ஓம் அனைத்துக்கும் ஸாக்ஷியான ஸ்ரீராமனிடம் கொள்ளும் பக்தியி-னால் அடையக்கூடிய ப்ரஹ்மானந்தத்துக்கு (பேரின்பத்துக்கு) ஸாக்ஷியான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

950. ஓம் அனைத்துலகோங்கிய ஸ்ரீராமனைப்பாடுவதில் உயர்ந்த ஹிமா-லயமான குருநாதருக்கு நமஸ்காரம்.

951. ஓம் புனிதகங்கையைத் தோற்றுவித்த ஸ்ரீராமன் பேரில் கானகங்-கையைத் தோற்றுவித்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

952. ஓம் அனைத்துலகினைக் காக்கும் ஸ்ரீராமனின் திருவடியினைத் தழு-வும் அளவற்ற ஆனந்தங்கொண்ட, ஸ்வர ஸமுத்ரத்தின் இனிது சிரித்துக் கும்மாளமிடும் அழகிய அலையான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

953. ஓம் இணையற்ற ஸ்ரீராமனின் குணங்களைப் பாடுவதில் இணையற்ற ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

954. ஓம் ஸப்தஸ்வரங்களில் நடமாடும் ஸ்ரீராமநாமத்தைப் பாடிக்கொண்டு நடமாடிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

955. ஓம் இசைப்பிரியனான ஸ்ரீராமனின் பண்புகளைப் பாடுதலில் பிரியமுள்ள ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

956. ஓம் நற்குணங்களின் மொத்த உருவான ஸ்ரீராமனை மகிழ்விக்கும் இன்னிசையொலியின் இருப்பிடமான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

957. ஓம் இன்குணம் படைத்த ஸ்ரீராமனை வர்ணிக்கும் இன்நடைநயமிகு கவியாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

958. ஓம் கவிநயத்தில் மகிழ்வுறும் ஸ்ரீராமனைப் பாடுவதில் மகிழ்வுறும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

959. ஓம் தாமரைமுகத்தோனாகிய ஸ்ரீராமனைப் பாடுதலில் ஆனந்தபரவசத்திற்சிவந்த திருமுகத்தினை உடைய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

960. ஓம் தாமரைக்கண்ணனாகிய ஸ்ரீராமனின் கடைக்கண் பார்வையினால் ஆனந்தபாஷ்பம் நிறை கண்களுடைய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

961. ஓம் ஸாமகானத்தினை விரும்பும் ஸ்ரீராம நாமத்தினை விரும்பும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

962. ஓம் ஸாமம் முதலான வேதங்களில் ஸஞ்சரிக்கும் ஸ்ரீராமனின் குணச் சிறப்புகளில் ஸஞ்சரிக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

963. ஓம் ஸாகேதம் எனப்படும் அயோத்தியை இருப்பிடமாகக் கொண்ட ஸ்ரீராமனின் பக்தரான, ஸங்கீதத்துக்கு இருப்பிடமான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

964. ஓம் தெளிந்த சான்றுகளினால் நிலைநாட்டப்பட்ட, பொருள் புலனின்பங்களில் பற்றற்ற, உண்மை பக்தியுடைய புனிதராகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

965. ஓம் சான்றுடன் உணர்த்தப்பட்ட பேரின்பமயமாகிய ஸ்ரீராமனை நாள்தோறும் கண்டு, புகழ்ந்து பாடி மகிழ்ந்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

966. ஓம் பரம்பொருளறிவுபெற்றோரின் அன்புக்குரிய ஸ்ரீராமனின் மங்கள சரிதத்தைப் பாடிப் புகழ்பெற்ற ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

967. ஓம் ஸீதைமணாளனைப் பாடுவதில் இணையற்ற கவிவரராகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

968. ஓம் ஸீதாராமனை இனிதே துதித்துப்பாடிய தலைசிறந்த முனிவராகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

969. ஓம் ஸீதாராமனை ஸங்கீதோபாஸனை செய்வதிலேயே முழுதும் ஈடுபட்ட ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

970. ஓம் மங்களமானதும் தூய்மைபடைத்ததுமான ஸ்ரீராமனின் தெய்வீக வடிவை தியானிப்பதில் ஈடுபட்ட தூய ஆத்மாவாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

**971.** ஓம் நற்குணங்களாம் மணிக்கருவூலமான ஸ்ரீராமனுக்கு அணிகளான இனிய கீர்த்தனைகளாம் தங்கக்கருவூலமான ஸத்குருநாதருக்கு நமஸ்காரம்.

**972.** ஓம் மங்கள ஒளியே ஆன ஸ்ரீராமனைத் தனது ஸு்ஸ்வர கானமாகிய நீராஜனத்தினால் ஒளிவீசச்செய்த ஸங்கீத ஸத்குரு ஸ்ரீத்யாகராஜஸ்வாமிக்கு மீண்டும் மீண்டும் நமஸ்காரம்.

**973.** ஓம் அழகு முகத்தோனாகிய ஸ்ரீராமனை ஸுஸ்வர கானத்தினால் துதித்த, ஒளிமிகு திருமுகமுடைய ஸத்குரு ஸ்ரீத்யாகராஜ ஸ்வாமிக்கு நமஸ்காரம்.

**974.** ஓம் பேரறிவாகிய ஸ்ரீராமனை இனிய கீர்த்தனங்களால் அனுபவித்து மகிழ்ந்த நல்லறிவு படைத்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

**975.** ஓம் இன்பத்துக்கு இருப்பிடமான ஸ்ரீராமனைப் பாடிய, இன்னிசையொலியின் இருப்பிடமான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

**976.** ஓம் அமுதரஸம் நிரம்பிய ஸ்ரீராமன்மேல் இன்சுவை நிரம்பிய கான அமுதத்தினைப் பொழிந்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

**977.** ஓம் அமுதே ஆன ராகத்தினைப் பெருக்கெடுத்தோடச்செய்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

**978.** ஓம் அமுதே ஆன இறைவன் நாமத்தின் இனிமையான, / அமுதினிய பெயருடைய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

**979.** ஓம் ஸுஸ்வரப் பெருக்காக ஓடும் நாமாமுதத்தினைப் பொழியும் முகிலான / ஸுஸ்வரப்பெருக்கிட்டுப் பாயும் நாமாமுத வெள்ளமான ஸத்குருவுக்கு நமஸ்காரம்

**980.** ஓம் அமுதைப் பொழியும் அழகிய கீர்த்தனைகள் எண்ணற்றவை செய்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

**981.** ஓம் அழகினிய ஒலி இன்பம் நறுமணம் பரப்புபவையும் அருட்கிளர்ச்சியினின்றுதித்தவையுமான புதியகானமலர்களால் ராமனை ஆராதித்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

**982.** ஓம் தேவர்களின் வணக்கத்துக்குரிய ஸ்ரீராமனை ஸேவிப்பதில் ஈடுபட்ட, ஸுஸ்வரத்தின் இருப்பிடமான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

**983.** ஓம் ஸூர்ய குலத்திற்சிறந்தோனாகிய ஸ்ரீராமனை வணங்கிய ஸுஸ்வர ஸூர்யனான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

**984.** ஓம் நுண்வடிவில் எங்கும் ஊடுருவிப் பரந்து விரிந்துள்ள ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

**985.** ஓம் நுண்ணிய நாத சக்தியின் வெளிப்படை உருவமான ஸத்கு-

ருவுக்கு நமஸ்காரம்.

986. ஓம் படைத்தல், காத்தல், அழித்தல், ஆகிய முத்தொழில் புரியும் பரம்பொருளின் துதிப்பாட்டுக்கூட்டங்களைப் படைத்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

987. ஓம் தேனினிய, மெல்லிழைவான குரலுடைய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

988. ஓம் ஸேதுவை அமைத்த ஸ்ரீராமனைத் தன் இனிய கானத்தினால் கட்டுறச்செய்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

989. ஓம் ஸேவிக்கப்படவேண்டிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

990. ஓம் ஸேவிப்பவரின் உள்ளத்தின் ஒரே இலக்கான ஸ்த்குருவுக்கு நமஸ்காரம்.

991. ஓம் ஸேவிப்பவரின் துன்பத்துக்கு முடிவான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

992. ஓம் ஸ்வஸ்வரோபாஸகரை இருப்பிடமாகக் கொண்ட - ஸ்வஸ்வரோபாஸகரின் உள் வளிக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

993. ஓம் ஏங்குபவருக்கு இசையெனும் அமுதினை ஊட்டும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

994. ஓம் ஏங்கும் சிஷ்யைக்கு இடைவிடா இன்னிசைப்பெருக்காம் நற்பேறருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

995. ஓம் ஸௌபாக்யபலனருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

996. ஓம் ஸௌமங்களப்ராப்தி ஆசியினை இசைக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

997. ஓம் சலனமற்ற மனமெனும் தடாகக்கரையில் த்யானிக்கப்படவேண்டிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

998. ஓம் அமைதியாகச் செல்லும் நாதநதியின் தோற்றுவாயான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

999. ஓம் மோன அமைதியினென்றெழும் நாதத்தின் முழுமையான சக்தியான ஸத்குருவுக்கு நமஸ்காரம்

1000. ஓம் துதித்துப் பாடவேண்டிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

1001. ஓம் இத்துதி புஷ்பார்ச்சனையில் மகிழ்வுறும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

1002. ஓம் ஆவலுடன் வேண்டப்படும் (குருவின்) தர்சனம், திருவடி ஸ்பர்சனம், திவ்யகான ச்ரவணம் (கேட்டல்) இவையாகிய பெரும்பேற்றினை அருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

1003. ஓம் ஸ்படிகம் போன்ற தெள்ளத்தெளிய ஒளியுடைய கான உருவான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

1004. ஓம் சுடர்விடும் நாதப்பேரொளியான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

1005. ஓம் ராமசந்திரன் புன்னகைக்கும் இனிய கீர்த்தனைக் கூட்டங்களை அருளிச்செய்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

1006. ஓம் ராமனெனும் ஆனந்தம் மென்னகைக்கும் ஸுஸ்வர சந்திரனாகிய (ராமனெனும் இன்ப ஒளிதனைப் பரப்பும் இன்னிசை நிலவான) ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

1007. ஓம் இசையெனும் அமுதக் கிரணங்களைப் பொழியும் ராமானந்தம் எனும் நிறைமதியான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

1008. ஓம் (ஸுஸ்வரமெனும்) இன்னிசையெனும் இன்பச் சாற்றின் பெருக்கான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

1009. ஓம் தூய, தெளிந்த இதயத்தில் நன்கு ஒளிரும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

1010. ஓம் தானே ஒளிரும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

1011. ஓம் மின்னிச்சுடர்விடும் தாரக நாமமெனும் பணிபூண்ட ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

1012. ஓம் ஒளிரும் இவ்வாயிரம் நாமங்களெனும் மாலையில் அழகுற்று விளங்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

1013. ஓம் ஸவரம், லயம் இவற்றின் உட்செறிவான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

1014. ஓம் ஸ்வரலய வரமருளும் (ஸ்வரத்துடன் ஒன்றிடும் வரமருளும்/ ஸ்வரம், தாளம் எனும் வரமருளும்) ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

1015. ஓம் ஸ்வரசுத்தமான கானாஞ்ஜலியை உண்டு பண்ணும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

1016. ஓம் இயல்பான இன்சுவையும் உணர்ச்சிச் செறிவும் ஆழ்ந்த, பற்பல ராகங்களிலமைந்த பாட்டுக்களின் மூலம் ஞானம் எழுச்சியுறச்செய்யும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

1017. ஓம் மிகவும் இனிமையாகப்பாடும் தெய்வீகப்பாடகராகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

1018. ஓம் இனிமைமிகு இசைஅமிழ்தின் வெள்ளமாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

1019. ஓம் தேன்பாய்ந்து எதிரொலிக்கும் இன்னிசை ஒலியான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

1020. ஓம் ஆசுகவியான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

1021. ஓம் குயிலை வென்ற இன்குரலுடைய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

1022. ஓம் தனதிதயத்தில் ஸஞ்சரிக்கும் ஸ்ரீராமனைத் தெளிவாகக்காட்டும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

1023. ஓம் அசையும் பொருள், அசையாப்பொருள் இவை அனைத்திலும் இறைவனைக் காண்பிக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

1024. ஓம் ஊக்கமும் உயிரும் ஊட்டிடும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

1025. ஓம் தனது பக்தையின் அன்பினால் மலர்ந்த இவ்வெண்ணமலர்களின் உள்ளுள்ள நறுமணமாகிய/இன்பமாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம். /தன்னுடைய அனன்ய பக்தையின் அன்புடை மனமெனும் புஷ்பத்தில் மகிழ்வுடன் அமர்ந்திருக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

1026. ஓம் தன்னையே உபாஸிக்கும் பக்தையை ஸ்வீகரித்துக்கொண்ட (ஏற்றுக்கொண்ட) ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

1027. ஓம் ஸ்வர அமிழ்து நிறை தெய்வீகக் கலசமேந்திய ஸங்கீத தெய்வமான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

1028. ஓம் இன்னிசை ஒலியெனும் தங்கச்சுரங்கமான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

1029. ஓம் பரமாத்மாவின் மறைநிலை மெய்ம்மையை விளங்கக்காட்டும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

1030. ஓம் புல்லரிக்கச் செய்யும் குருதேவருவுக்கு நமஸ்காரம்.

1031. ஓம் ஹரிக்கு அர்ப்பணமாக க்ருதிகள் செய்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

1032. ஓம் ஹரிதாஸ சிரோமணியான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

1033. ஓம் ஹரிநாம ஸங்கீர்த்தனப்ரியரான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

1034. ஓம் ஹரிநாம ஸங்கீர்த்தனத்தின் ஆனந்தமே உருக்கொண்ட ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

1035. ஓம் ஹரிநாமஸங்கீர்த்தனத்தை ஆனநதத்துடன் வர்ணிக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

1036. ஓம் ஹரிபஜனையின் ஆனந்தம் பெருக்கெடுத்தோடும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

1037. ஓம் குரங்குகளைப் பரிவாரமாகக் கொண்டோனைப் பாடிய, ஸப்தஸ்வரங்களைப் பரிவாரமாகக் கொண்ட ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

1038. ஓம் ஹரிநாமஸ்மரணமே வாழ்வாகக் கொண்ட ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

1039. ஓம் ஹரிஸமர்ப்பணமாகத் தன் வாழ்வினை நடத்திய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

1040. ஓம் ஹரியின் பாதத்தாமரைகளைப் போற்றிய போற்றற்குரிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

1041. ஓம் ஹரியின் திருவடிதனை இதயத்தில் தரித்த ஸத்குருவுக்கு

நமஸ்காரம்.

1042. ஓம் ஹரியுடனிணைந்த ஸங்கீதத்தைத் தன்னோடிணைத்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

1043. ஓம் ஹரி, ஹரன் இவர்களின் ஒருமையைப் பாட்டுக்கள் மூலம் தெளியக் காண்பித்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

1044. ஓம் ஹரிநாம ஸங்கீர்த்தனம் நடக்கும் ஸந்நிதியில் இருக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

1045. ஓம் ஹனுமான், லக்ஷ்மணன், பரதன், சத்ருக்னன் இவர்களுடன் கூடிய ஸ்ரீஸீதாராம விக்ரஹத்தைப் பாடிப் பூஜை செய்த ஒப்பற்ற புண்ய சரிதத்தை உடைய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

1046. ஓம் பொன்மயமான ஸீதாராமசந்திரன் (ஸீதாராமனாகிய சந்திரன்) உதயமாகும் ஸங்கீதத் தொடுவானமாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

1047. ஓம் பரிவின் உருவாகிய ஸதகுருவுக்கு நமஸ்காரம்.

1048. ஓம் மிகவும் நேசிக்கப்படும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

1049. ஓம் நன்மை செய்கின்ற ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

1050. ஓம் நன்மை பயக்கும் பாட்டுக்களை போதித்த ஆசார்யனான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

1051. ஓம் நல்லுபதேசம் செய்யும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

1052. ஓம் குளிர்ச்சி தரும் மருந்திடுதல் போன்று பாட்டுக்கள் பற்பல பொழிந்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

1053. ஓம் தண்மதிக் கதிர்கள் போன்ற தெய்வீக வாக்கினையுடைய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

1054. ஓம் பொன்மலர் நறுமணம் (பெற்றது) போன்று இன்னிசை நறுமணம் பெற்ற ஆசுகவி பொழியும் சக்தியினை அருளும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

1055. ஓம் ராம நாமமாகிய வைரங்கள் பளபளக்கும், இனியபாட்டுகளெனும் பொன்னணிகள் பூண்டு விளங்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

1056. ஓம் ராமனிடம் பக்தி எனும் நெருப்பில் விஷயப் பற்றினை ஆஹுதியாக இட்ட/ விஷயப்பற்று ஆஹுதியாக இடப்பட்ட, ராமபக்தி எனும் நெருப்பே ஆன ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

1057. ஓம் இதய வெம்மையைத் தணிக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

1058. ஓம் இதயத்தைத் தொடும் க்ருதிகளைச் செய்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

1059. ஓம் உளங்கவரும் ஸ்ரீராமனை இனிய கானத்தினால் கவர்ந்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

1060. ஓம் இதயங்குளிரப் பேசும் ஸ்ரீராமனின் மெல்லினிய மொழிதனைப்

பருகி ஆனந்தித்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

1061. ஓம் இதய ஆழத்தினின்றெழும் அன்பெனும் புஷ்பத்தினால் பூஜிக்கப்பட்ட குருவுக்கு நமஸ்காரம்.

1062. ஓம் உள்ளத்தை உவகை கொள்ளச் செய்யும் நாதகுருவுக்கு நமஸ்காரம்.

1063. ஓம் ராமனின் ஆனந்தத்தினால், மயிர்க்கூச்செறிந்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

1064. ஓம் களிப்பூட்டும் நாத "வஸுதாரா" நீர்வீழ்ச்சியான / நாதமாகிய செல்வத்தைப் பொழியும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

1065. ஓம் உள்ளத்தின் அடி ஆழத்தினின்றெழுந்த, குழந்தையின் மழலையொத்த இத்துதியினை மிகுந்த மகிழ்ச்சியுடன் அங்கீகரிக்கும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

1066. ஓம் காரணம், விளைவு இரண்டும் தானேயான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

1067. ஓம் முழுமுதற்காரணமாகிய ஓங்கார நாதப்ரஹ்மனாகிய ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

1068. ஓம் எழுத்துக்கள், இன்னிசை ஒலிகள் கொண்ட ஸஹஸ்ரநாம புஷ்பாஞ்ஜலி ஸமர்ப்பணத்துடன் ஸேவிக்கப்பட்ட ஸ்ரீஸத்குருவுக்கு நமஸ்காரம்.

1069. ஓம் மங்களம் தரும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

1070. ஓம் த்யாகத்துடனிணைந்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

1071. ஓம் கமகத்தினுள் உறையும் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

1072. ஓம் ராகத்தின் மூலமான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

1073. ஓம் விழிப்புடனுள்ள ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

1074. ஓம் பெயருக்குத் தக்கவாறுள்ள ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

1075. ஓம் ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

1076. ஓம் நற்குணங்களின் புகலிடமான ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

1077. ஓம் இனிய அழகிய ராகங்களில் விருப்புள்ள ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

1078. ஓம் வேத ஸாரமான க்ருதிகளைச் செய்த ஸத்குருவுக்கு நமஸ்காரம்.

1079. ஓம் வணங்குதற்குரிய குருவுக்கு நமஸ்காரம்.

1080. ஓம் **மங்களமான ஸௌஸ்வர புஷ்பார்ச்சனை செய்யப்பட்ட ஸ்ரீத்யாகப்ரஹ்ம ஸத்குருஸ்வாமிக்கு மீண்டும் மீண்டும் நமஸ்காரம்.**

ஓம்.

மங்களம்.

ஸ்ரீராம ஜயம்:

# ஸத்குரு ஸ்ரீத்யாகப்ரம்ம

# சரணாகதி கத்யம்

## ஓம்

ஓம் 1. ஸ்ரீராமநாமமாகிய இறக்கையினாலேயே தொடக்கூடிய குருசரணம் வெற்றியுடனிலங்குக!

2. ஹரிநாமங்களாகிய புஷ்பக்குவியல்களினால் பூஜிக்கப் பட்ட மங்களமான பாதம்;

3. தடங்கல்களைப் போக்கும் நற்றிருவடிகள்;

4. உடைந்த மனத்தினை திடப்படுத்தும்; பக்தையின் அன்பான இதயத்தை இருப்பிடமாகக் கொண்ட; தியானிக்கப்படவேண்டிய மங்களசரணம்;

5. பக்தையின் செல்வமான புனித சரணம்;

6. பக்த பாபங்களை அழிக்கின்ற; எல்லா நோக்கங்களையும் நிறைவேறச் செய்யும்; ஸங்கீத ஞானத்தை அருளும் மெய்ப்பாதங்கள்;

7. சரணடைந்தவரை உய்விக்கும் புனிதப் பத இணை;

8. அன்புமிகு பக்த உயிர் மூச்சினின்று பிரியாத இறைவன் திருவடிகள்;

9. பக்தையின் ஒரே புகலிடமான, பூஜிக்கப்படவேண்டிய குருவின் தூய திருவடி;

10. பக்தையால் இறுகப்பற்றப்பட்ட மங்களமான திருவடித்தாமரை;

11. நாதத்தில் பற்றுடைய பக்தை வணங்கிடும் அழகிய திருவடித்தாமரை;

12. பேரின்பப்பதவியளிக்கும் ஸத்குரு திருவடி இணை - தம்மை நான் சரணமடைகிறேன்.

13. ஸ்ரீராம பக்த; ராமனை அர்ச்சித்த; ராமனை பஜித்த; மங்களம் செயும்; திருவார்ந்த; மங்களமே ஆன; விடியற்காலையின் அழகே ஆன;

14. ஸ்ரீராமனாகும் பரம்பொருளை நன்கறிந்த; ராமனை இனிதே பாடிய; ராமனின்பாடகரான; ராமதாரக நாமத்தினைத் துதித்த; தாரக நாமமே தன்னுருவாய்க் கொண்ட;

15. ஸ்ரீராமனின் நண்பரான; ராமனில் மகிழ்ந்த; ராமநாமத்தினால் கள்வெறியூட்டும்; ஸ்ரீராமனின் மங்கள சரிதத்தைப் புகழ்ந்த; ஸ்ரீராம-

சந்திரனை இனிதேத்திய;

16. ஸ்ரீராமனின் ஒளிக்கதிர்; ஸ்ரீராமனுடையதான திருமேனி; முழுமைநல-மருளும்; ராமனே ஆன; உயிர் வாழ்வூட்டும் ராமநாமத்தினை முழங்-கும் தேனினிய குரல் (ராம மயமான வாழ்வுடைய; ராமநாமத்தினை முழங்கும் தேனினிய குரல்) படைத்த;

17. ஸ்ரீராமனின் இன்பமான; ராமன் மகிழ்ந்த (இசைத்தோட்டமான); ராமன் மகிழும் ராகாலாபனையில் மகிழும்; ராமநாமத்தின் இன்ப-மான / இருப்பிடமான - இன்பமே ஆன ராமநாமமான;

18. ஸ்ரீராமக்ருஷ்ண லீலைகளெனும் வலையில்/ ஸமூஹத்தில் சிக்குண்ட; இனிய கீர்த்தனைகளெனும் வலையில்/ ஸமூஹத்தில் ஸ்ரீராமனை-யும் க்ருஷ்ணனையும் சிக்க வைத்த;

19. நாராயண, ஹரி, ராம, க்ருஷ்ண, கோவிந்த எனும் நாமங்களைப் பாடி பஜனை செய்த;

20. ஹரிபக்தர்களைக் கூப்பிடும் பஜனோத்ஸவ ஆனந்தமான;

21. சூரனான ரகுராமனால் மிக்க மகிழப்பெற்ற, கடைத்தேற்றுகின்ற நூற்றுக்கணக்கான ராகங்களில் க்ருதி மணிமாலைகள் அமைத்த;

22. உலகெலாம் மகிழ்விப்போனை உவந்துபாடி உலகெலாம் மகிழ்விக்-கின்ற;

23. பகவானின் பல திருநாமங்கள் நிரம்பிய, தெள்ளமைதி நிறைமனமு-டைய பாகவத திலகமான;

24. மங்களம் தரும்;

25. பக்தியுடன் கூடிய ஸங்கீதத்தை போதித்த ஞானாசார்யதேவ!

26. திவ்ய நாமஸங்கீர்த்தனத்தில் விஞ்சிய;

27. ராகமும் தாளமும் அழகிய சொற்களும் இணைந்தாடும் கூத்தின் களிப்பான;

28. ரகூத்தமனைத் தேனினும் இனிமையாகப்பாடிய கானோத்தம!

29. ரகுவரன் நடமாடும், இன்னிசை ஒலிகள் பலவண்ணம் தீட்டப்பட்ட, இன்னிசை இன்பத்தினால் சூழப்பட்ட பல்லாயிரக்கணக்கான க்ருதி-களைப் படைத்த;

30. தலைசிறந்த யோகியான; இன்னிசையின் / அன்பின் இருப்பிடமான; நோய்தீர்க்கும்; ஆனந்தமயமான; மிகப்புனிதமான பெயருடைய; ரகு-வரனைப் பாடிய (நோய்தீர்க்கும், ஆனந்தமயமான மிகப்புனிதமான பெயருடைய ரகுவரனைப்பாடிய);

31. ஹரியைப் பூஜித்த; குரலினால் ஹரியை வசப்படுத்திய / குரலினி-மையில் குயிலை வென்ற; அறிவின் கதிரவனாகிய; புண்ணியமுடைய; கணபதியைத் தாழ்ந்து பணிந்திட்ட; முரளீதரனை வணங்கிய;

32. பொறுமை படைத்த; தளர்வற்ற; நுண்ணறிவுத்திறம் படைத்த; அமை-தியாய் நிலைத்த மனம் படைத்த; மாறுதலற்ற; தளர்ச்சியற்ற தன்-மையினை அருளும்; சிறந்த, கட்டுப்பாடுள்ள; தெய்வீக உள்ளுணர்-வொளிபெற்ற; உள்ளொளியும் அருளுணர்வுமருளும்; நன்னட்பாகிய; ஐயமற்ற;

33. ஆசை, அறிவு மயக்கம் இவையற்ற; நிஜபக்தரைக் காத்தருளும்;

34. மூச்சினை வென்ற; அழிவற்ற; இன்னிசைக்குரலுடைய; உறுதி, ஊக்-கம், இன்பம் இவற்றினை அருளும்; அறிவினைத் தூண்டி எழுப்பும்; பேரொளி படைத்த, அழகுறு ஸ்ரீராமனின் கடைத்தேற்றும் நாமத்-தின் மூலம் மகிழ்வூட்டும் - நாமத்தில் மகிழும்;

35. அன்புக்குரிய; இணையற்ற; நின்னைப்போல் இன்னொருவர் இல்-லாத; விவரிக்க இயலாத சிறப்புடைய; அழிவற்ற;

36. உயர்வான உள்ளுரம் படைத்த; உயர்குணம் படைத்த; பற்றற்ற; அமைதி குலையாத; எழுத்துக்களை வென்ற; வாக்குத்திறனில் விஞ்சும்;

37. அருமதிப்புள்ள; தவம் நிறைந்த; பூஜிக்கப்பட வேண்டிய; ஒளிரும் மதிபடைத்த ஞான குருவே!

38. பக்தையின் அநுராகத்தின் வடிவே!

39. பக்தையின் அந்தராத்மாவே!

40. கண்ணீர் கங்கையில் நீராடிய பக்த உள்ளார்ந்த அன்பெனும் பாட்-டினாலேயே நீராட்டப்பட்ட; பக்திக்கண்ணீர் மலர்களால் அர்ச்சிக்கப்-பட்ட; உணர்ச்சியின் அடைவு எனும் நைவேத்யம் ஸமர்ப்பிக்கப்பட்ட; ஏகாக்ர சித்தமே பூஜையாக அமையப்பெற்ற;

41. திவ்ய திருச்சன்னதியில் விடியுமுன் வீணை வாசிக்கப்பட்ட;

42. நின்னையே அடைந்திட்ட நினதிச் சிஷ்யைக்கு நிம்மதியினை அரு-ளும் ஆசார்ய தேவ!

43. அன்பின் வெளிப்படை உருவான;

44. மங்களகரமான பார்வையினால் பக்தையைச் சூழும்; பாதாதிகேசம் பக்தையின் இவ்வன்பு மழலைப் பாட்டினால் சூழப்பட்ட;

45. மிகச் சிறந்த அழகிய மென்குரலே அணியாகக் கொண்ட; சிஷ்யை-யின் இதயத்தாமரைக்கு அழகூட்டும், தேனான குரல் படைத்த;

46. ரகுநந்தனை மகிழ்விக்கும் தேன்குரல் படைத்த; இன்னிசைத் தேனுக்-காக ஏங்கும் இதயத்தின் மனோரதமான தேனொழுகும் இன்குரல் படைத்த;

47. இனிய இசையினால் ராமனை அழகுபடுத்திய; சூர்ய குலத்தின் அணிகலனை (ஸ்ரீராமனை) அணிசெய்த அழகினிய குரல் படைத்த; ராம நாமமெனும் முத்து மாலையினால் அணிபூண்ட;

48. அமைதியை அணிகலனாகக் கொண்ட / அமைதிக்கு அழகூட்டும் ராமனை அணிசெய்யும் அமைதியான மனதுடைய; அமைதியான ஸுஸ்வர வித்யையை அணியாகப்பூண்ட / அணிசெய்யும்;

49. நற்குணங்களின் சுரங்கமான ஸ்ரீராமனுக்கு ஆடையாக அமையப்பெற்ற நல்வாக்கினைஉடைய, இன்குரலுருவான;

50. ராகத்தின் (பண்ணின், அன்பின்) உருவான ஸ்ரீராமனை ராகத்துடன் (பண்ணுடன், அன்புடன்) துதித்த, ராமபக்தியின் உருவான;

51. ஸ்ரீராமமந்த்ரமே ஆதாரச்ருதியாக, இனிய நாதமே திவ்யமான உருவாகக் கொண்ட;

52. ஸ்ரீராமமந்த்ரம் ஒளிரும் திருநாவுநுனியுடை;

53. ஸ்ரீராமமந்த்ர புஷ்பத்தினால் உபாஸிக்கப்பட்ட ஸுஸ்வர தேவ!

54. தேவதேவர்களால் அர்ச்சிக்கப்பட்ட ஸ்ரீராமனை இன்னிசையால் அர்ச்சித்த, இன்னிசைகானத்தில் மகிழ்ந்த தேவ!

55. வேதங்களின் கூட்டத்தில் உறையும் பரமனின் செவிக்கினிய புகழ்பாடிய க்ருதிக் கூட்டங்களைச் செய்த, ச்ருதி லயத்தில் ஒன்றிய, ஒளிமயமான திருவதனமுடைய;

56. பகலவனையும் தண்மதியினையும் கண்களாகக் கொண்டோனை (ஸ்ரீராமனை)ப்பாடும் ஆனந்தக் கண்ணீர் பொங்கும் கண்மலர்களுடைய;

57. முழுமதிமுகம் படைத்தோனின் (ஸ்ரீராமனின்) அழகு, இன்பம், குரலினிமையை இனிது பாடிய, இன்னிசைத்தண்மதிக்கதிரான;

58. மாசு நீக்கும்; இன்னிசைப் பெருக்கான; என்றும் நிலைத்திருக்கும் தன்மையின் வடிவான ஸ்ரீராமனின் தாரக மந்திரத்தின் நிலைத்த இருப்பிடமான / தாரக நாமத்தினை நிலைத்த இருப்பிடமாகக் கொண்ட; இன்னிசை ஆழியான;

59. புகழ்ச்சிப் ப்ரியனான மகாவிஷ்ணுவினைப் புகழ்ந்த - புண்ணியமும் புகழும் வாய்ந்த;

60. திறன்மிகு, மிகச் சிறந்த கவிமேதையான;

61. அழகிய ஸ்ரீராமனிடம் அன்பினால் இனிது ஒளிரும், அழகிய பண்ணும் இன்பமும் ஆகிய வெள்ளிக்கடலான;

62. மேகத்தின் காந்தியுடையோனை இன்னிசை ஜாலமெனும் ஆழியில் கொண்ட தெய்வீகமான; ஆழியின் கம்பீரம் கொண்டோனை கம்பீரமாகப்பாடும் இசை மேகமான; தாமரைபோல் சிவந்த (இறைவனின்) பாதங்களை அர்ச்சித்த இதயத்தாமரையுடைய;

63. சரணம் வேண்டும் இவ்விதயத் தடாகத்தின் தாமரையான; / சரணம் வேண்டும் இவ்விதயத் தடாகத்தில் ப்ரதிபலிக்கும் நிலவான;

64. மன்மதனைப் படைத்தோன் மேல் பாட்டுக்கள் படைத்த; பிறவிப் பெருங்கடலுக்குத் தோணியான; இயலுலகின் மூலமான இறைவனிடம் பக்திக்கு மூலமான; அன்பின் பிறப்பிடமான ஆண்டவன்பால் கொண்ட அன்பால் பாட்டுகளைப் பிறப்பித்த;

65. பரமசிவன் மனதால் தியானிப்போனை (ஸ்ரீராமனை) தியானிக்கின்ற; சிவனைப் புகழ்ந்து பாடிய; சிவனால் துதிக்கப்பட்டவனின் (ஸ்ரீராமனின்) துதிகள் செய்த; பிறவிபயம் எனும் அடர்ந்த மேகக்கூட்டங்களைச் சிதற அடிக்கும் புயற்காற்றான; இயலுலகின் இறைவனைப் பல்வேறு வண்ணப் பாட்டுக்களால் துதித்த;

66. பாபமில்லாப் பரம்பொருளை உள்ள உணர்வுடன் அர்ச்சித்த; பத்மநாபனின் புனித நாமத்தின் ஒளி பெற்ற;

67. சூர்ய சந்திரர்களைக் கண்களாகக் கொண்ட ஹரியின் மேல் அன்புகொண்ட; கலியின் தீமைகளை ஒழிக்கும் ஹரியின் ஒளிக்கதிரான; ஹரியை வசப்படுத்தும் குயிலினிய குரல் படைத்த;

68. மங்களமான அழகிய திருக்கோலம் கொண்ட மாதவனின் தேனினிய நாமத்தை இனிதே முழங்கிய; கமலையின் துணைவனை அழகினிய இசைக்குரலில் அர்ச்சித்த;

69. அழகினிய இசைவடிவுடைய கவிக்கதிரவனான;

70. திருவுடைய அழகிய ராமனின் திருவார்ந்த நாமத்தைத் திருவுற்று இசைப்பதில் சிறப்புற்ற;

71. ஸ்ரீராமனைப் பணிந்த; ஸ்ரீராமனை அடைந்த; இன்பமான ராமநாமத்தைப் பாடுதலால் அடையக்கூடிய; இப்பக்தையால் அணுகப்பட்ட; ஆழ்ந்த பக்தி உணர்வு எனும் புஷ்பத்தினால் பூஜிக்கப்பட்ட;

72. புஷ்பக விமானமுடைய ஸ்ரீராமன் களித்திடும், ஒளிரும் ஏழு ஸ்வரங்களெனும் விமானமுடைய / ஏழுமாடி அரண்மனையையுடைய;

73. அமரர்களால் பூஜிக்கப்பட்டவனைப் பூஜித்த, அமரகானத்தில் சிறந்த; வேதங்களால் அறியப்படவேண்டிய பரம்பொருளை அறியச் செய்த; காந்தர்வ வேதம் எனப்படும் இசைக்கலையில் தலைசிறந்த; கௌஸலையின் புதல்வனைப்பாடிய;

74. கௌஸல்யாபுதல்வனின் தோழரான; கௌசிகர் எனப்படும் விச்வாமித்ரரின் நண்பனின் (ஸ்ரீராமனின்) நண்பரான; சூர்யகுலத்தலைவனின் (ஸ்ரீராமனின்) அன்பரான; தன்னை அடைந்தோரின் உற்றானின் (ஸ்ரீராமனின்) உற்றாரான; ஸ்ரீராமசந்திரனைத் துணையாகப் பெற்ற;

75. தாமரையின் நண்பனின் (ஆதவனின்) குலத்துதித்தோனுக்கு (ஸ்ரீராமனுக்கு) மிகவும் நெருங்கிய; வாயுபுத்ரனின் உற்றோனுக்குற்ற; குரங்குகளைப் பணியாளராகப் பெற்றோனை (ஸ்ரீராமனை)ப் போற்றிய வாக்கின் ஈசராகிய;

76. தீய சக்திகளுக்கு எதிரியான ஸ்ரீராமனை ஆராதித்த ஸ்வரக்கூட்டங்களுடைய; அழகுமுகம் படைத்த ஸ்ரீராமனின் நற்குணச் சேர்க்கையை விரித்துரைத்த; நற்குணம் நிறைந்த ஸ்ரீராமனைப் பாடுவதில் ஈடுபட்ட நல்லறிவு நிரம்பிய;

77. இடைவிடா, இனிய ராமநாம கானத்தினால் ஸ்ரீராமனை மகிழ்வுறச் செய்த; நீடமைதியும் வீட்டுப்பேறும் நல்கும் ஸ்ரீராமனைப் பாடித்துதித்த;

78. அமரர் கோமானால் துதிக்கப்பட்டோனைத் துதித்த இசைக்கோமானாகிய;

79. ஆகமங்களில் ஸஞ்சரிப்பவனின் இன்குணங்களில் ஸஞ்சரிக்கின்ற; கருணையின் சுரங்கமான ஸ்ரீராமனைப் புகழும் பாடல்களின் சுரங்கமான;

80. ஆதவன் குலத்துச்சிறந்தோனின் (ஸ்ரீராமனின்) கானத்திற்சிறந்த; ரகுராமன் மகிழும் அழகினிய ராம நாமத்தைப் பாடுதலின் எல்லையான;

81. சூர்யகுல அரசனைத் துதிப்பதில் அரசராகிய; தீரனாகிய ரகுவீரனைத் துதித்த; மென்மையும் வலிமையும் ஒருங்கிணைந்த சிறந்த இன்னிசைக் குரலுடைய;

82. திருமகளின் நற்பேறுன ஸ்ரீமன் நாராயணன் கோவில்கொள்ளும் பேறுபெற்ற நல்லிதயமுடைய;

83. மக்களைத்தாங்கும் ஸ்ரீராமனை அமுதச் சாற்றின் வீழ்ச்சியென இடைவிடாத ராகப் பொழிவில் தாங்கிய; பூமியைத் தாங்கும் மலையைத் தாங்கியவனைத் தாங்கும் இன்னிசை வீழ்ச்சியான;

84. கூற்றுவனால் போற்றப்பட்டோனைப் போற்றிய; தீவினைக்குக் கூற்றுவனாகிய; இறைவன் திருநாமத்தைப் பாடுதலாகிய மலர்மணம் விண்ணினை எட்டிய;

85. சிறந்த லீலையாக மனித உருக்கொண்ட பரமாத்மாவின் பூஜையாக அமைந்த சிறந்த இன்னிசை இன்பமே ஆன;

86. மேன்மையான இன்பமான ஸ்ரீராமசந்திரன் முன்னிலையில் இன்குரலிற்பாடிய;

87. தம்பூராவுடன் கூடிய ஸுஸ்வர கானத்தினால் தும்புருவால் துதிக்கப்பட்டோனை இனிதே துதித்த;

88. மலர்க்கணைகளைத் தொடுக்கும் மன்மதனின் தந்தையான ஸ்ரீமந் நாராயணனை இன்குரலிற் பாடிய; இன்பமளிக்கும் ரகுநாயகனிடம் பக்தியினால் இன்புற்ற பாடகராகிய;

89. வில்லினால் அழகு சேர்க்கப்பட்ட அழகனை (ஸ்ரீராமனை) அலங்கரிக்கும் அழகிய வானவில்லான ஸப்தஸ்வரங்கள் கொண்ட; யாகத்தைக் காத்தவனை (ஸ்ரீராமனை) இன்குரலிற்பாடிய;

90. வாயுபுத்ரனான ஹனுமான் இறுகப் பற்றிய அழகிய பாதத்தாமரைகளை எப்பொழுதும் துதித்த; தாமரைத் திருமுகமுடையோனை இனிது பாடிய;

91. ஆயிரக்கணக்கான அழியாப்பாடல்களினால் அச்யுதனைத் துதித்த; இசைப்பிரியரான; இசையன்பனாகிய ஸ்ரீக்ருஷ்ணனுக்குகந்த வகையில் பாடிய; பாட்டுகளின் எளிமை, இனிமை, பொருட்செறிவு, அழகு, இயல்பு இவற்றில் இணையற்ற;

92. வஞ்சகமான பொம்மலாட்டத்தில் உயிர்களை ஆட்டுவிக்கும் கயிற்றினைப் பிடித்துள்ள ஸ்ரீக்ருஷ்ணனின் லீலா நாடகங்களைப் பாடும், கணக்கற்ற பாட்டுக்குவியல்களைச் செய்த;

93. விச்வரூபங்கொண்ட ஸ்ரீக்ருஷ்ணனின் அழகிய உருவத்தை இசைவானில் அன்புத் தூரிகையால் வண்ணம் தீட்டிய;

94. இச்சிஷ்யையின் பக்தியுடை சித்தவானில் அன்புத்தூரிகையால் வண்ணம் தீட்டப்பட்ட ராகத்தின் உருவே!

95. மாதவனின் தேனினிய நாம, குணக்கூட்டங்களை மேகத்தை ஒத்த குரலில் பாடிய, தேனினிய குரல் படைத்த, நாமமெனும் தேனை சேகரிக்கும்;

96. திருமகள்துணைவனின் குரலினிமையை ஒலித்த, இனிமையே ஆன குரலுடைய;

97. திருமகள் அன்பனின் நாமங்களைப் பாடுதலில் விருப்பங்கொண்ட;

98. திருமகள் திருமுகத்தாமரையினை மலர்விக்கும் பகலவனாம் நாராயணனை நாள்தோறும் பாடுதலில் இன்பங்கொண்ட / பாடிமகிழ்விக்கும், இன்னொலியாம் தாமரையை மலரச் செய்யும் பகலவனாகிய;

99. திருமகளை மகிழ்விப்போனை மகிழ்விக்கும்படி அழகிய திருநாமங்களை இனிது பாடும் தலைசிறந்த பாடகராகிய;

100. ஆழியுள் மறைந்தோனுள் மறைந்த இன்னிசை ஆழியான; அமுதச் சாறுன / ஸாரத்துள் ஸாரமான ராமநாமத்தின் ஒலி இன்பத்தின் ஸாரமான;

101. தொடர்ந்து நாமாவளிகளைப் பொழியும் கானமேகமான; அமுதச் சாறுன, கணீரென ஒலிக்கும் நாதத்தினைப் பொழியும்; எல்லோரையும் தன்வயப் படுத்துகின்ற, ஸ்ரீராமனின் நாமத்தினைப் பொழியும் அமுதமுகிலான;

102. நாம அம்ருதம் பெருக்கெடுத்தோடும் தெய்வீக இசைகங்கையான;

103. இசையெனும் அமுதக்கடலே ஆன;

104. பக்த அன்பெனும் கடலுக்கு நிறைமதியான;

105. இசையின் உறவினரான/இசையினையே உறவாகக் கொண்ட;

106. தெய்வீகமான இசைக்கலையை அருளும்; இன்குரல் அருளும்; வரத-ராஜரின் துதி பாடியுள்ள ஸ்வரராஜாவான;

107. நாகாசலம் எனப்படும் திருவேங்கடத்துறைவோனின் நாமத்தின் இருப்பிடமான; நாம அம்ருதத்தைப் பருகிடும்; அம்ருதமே ஆன கானமாம் பேரின்பத்தின் இருப்பிடமான;

108. தாமோதரனை மகிழ்விக்கும் இன்பமான, நாமகானத்தின் ராகத்தின் இன்பமான / பக்தியின் நறுமணமான;

109. மதுஸூதனனுக்குப் பிரியமான நாமத் தேனினைப் பெருக்குறச்செய்-யும்;

110. ஸீதையெனும் பெண்மணியின் அழகிய இதயத்தை இருப்பிடமாகக் கொண்டோனின் இருப்பிடமாகும் அழகிய இதயத்தைக் கொண்ட; அழகான நாமகான இனிமையால் ராமனை மகிழ்வித்த [ராமன் மகிழ்விக்கப்பட்ட அழகான நாமகானத்தினை இனிது இசைத்த];

111. பேரின்பம் தரும் ஸ்ரீராமநாமத்தின் மர்மத்தினை உணர்ந்த; ஸ்ரீராம-னின் கடைத்தேற்றும் நாமத்தின் பெருமையினை இனிது இசைத்த;

112. நாமந்தனை இனிமையாக இசைத்து இயற்கைக்கப்பாற்பட்ட, ஒளிமி-கும் வடிவழகுடை ஸ்ரீராமனை அர்ச்சித்த; ராமமயமான, களங்கமற்ற உள்ளத்தினை உடைய;

113. பெயரும் உருவுமற்ற தெய்வத்தின் பெயர், உருவத்தின் மகிமையை தெய்வீகமாகப் பாடி இன்புற்ற;

114. குணங்களற்ற (குணங்களுக்கப்பாற்பட்ட) ஸ்ரீராமனின் எண்ணற்ற குணக்கூட்டங்களை எடுத்துரைப்பதில் ஒப்பற்ற; வேதத்தின் உட்பொ-ருளாம் ஸ்ரீராமனை அமிழ்தினை விஞ்சிய கானத்தில் இசைப்பதில் உவமையற்ற;

115. குணங்களற்ற பிரஹ்மத்தினை அறிந்த;

116. நிர்குணப்ரம்மன்!

117. நாதப்ரஹ்மன்!

118. பக்தையின் அன்பின் இசை உருவே!

119. பக்தை மிகவும் ஏங்கி விரும்பும் நாத இன்ப வடிவே!

120. இவ்வுண்மைவாக்கின் உண்மையே ஆன உண்மைப்பொருளான; உண்-மையின் உருவான ஸ்ரீராமன்மேல் பற்றுகொண்ட இசையின் உருவான;

121. ஸங்கீத சாஸ்திரத்தில் தலைசிறந்த (நன்கு நீராடிய); நாமகீர்த்தன-மெனும் ஆற்றில் நீந்துவதில் தனித்திறம் படைத்த; விரைந்தோடும் நாமானந்தமெனும் ஆறுன; நாமகானமெனும் அமுதக்கடலான; நாமத்-தினை ஒலிக்கும் ஞானமேகமான; ராம, க்ருஷ்ண எனப்பாடிப்புகழும்;

122. நாமாமுதம் பெருகி ஓடச்செய்யும் நாததேவ!

123. ஸ்ரீராமனிடம் அனுராகம் (அன்பு கலந்த பக்தி) எனும் உயர்ந்த மலையின் உச்சியான;

124. நாமமலரின் அடர்ந்த நறுமணமாகிய;

125. இன்னிசையொலியெனும் மலர்நறுமணம் பெற்ற நாதாரண்யமான; இன்னிசையொலி இன்பம் கூவும் குயிலான; ஸுஸ்வரமாம் கதம்ப மலர்களின் நறுமணம் கமழும் தென்றலான;

126. ஸுஸ்வரமாம் அமுதரஸம் நிரம்பிய; ஸுஸ்வர அமுதின் இனிமை-யான; ஸுஸ்வரக்கூட்டங்களால் சூழப்பட்ட; ஸுஸ்வரத்தின் உடலான; ஸுஸ்வரத்தின் இயல்பான; இதயத்தைக் கொள்ளை கொள்ளும் இன்குரல் படைத்த;

127. ஸுஸ்வரத்தில் திளைத்து மகிழும்; ஸுஸ்வரத்தில் மகிழும் இவ்வித-யத்தில் மகிழும்;

128. ஸுஸ்வர அரசரான; ஸுஸ்வர அவை படைத்த; ஸுஸ்வரத்தை இருப்பிடமாகக் கொண்ட / ஸுஸ்வரத்தின் இருப்பிடமான; தேனைப் பழிக்கும் தேன்குரல் படைத்த;

129. வெண்ணிற அரவரசனைப் படுக்கையாகக் கொண்டோனை இன்னொ-லியால் வழிபட்ட, இன்னிசை இன்பத்தையே படுக்கையாகக்கொண்ட, இன்னிசை யோகேந்த்ர!

130. ஸுஸ்வர கானத்தினால் அடையக்கூடிய; அமுதமய மொழியுடைய; இனிய நாதத்தினை அருளும்; இசை இன்பந்தரும் க்ருதிக் கூட்டங்-கள் செய்த; இன்னிசையில் மகிழும்;

131. அழகொளியூட்டும், அழகொளி மயமான ஸப்தஸ்வரதேவதைகளைக் காணச்செய்யும்;

132. வன்னொலியினிடமிருந்து காக்கும் இன்னொலிக் கவசமாகிய ஆசார்ய!

133. அழகிற்சிறந்த ஸப்தஸ்வரங்களின் இன்னொலியில் மறைந்துள்ள ஆழ்அமைதியான ஓங்காரமான;

134. வேறொரு எண்ணமுமில்லாமல் ஒரே நினைவுடன் பக்தையினால் அல்லும் பகலும் த்யானிக்கப்படுகின்ற; தன்னையே பஜிக்கும் பக்-தையிடம் பரிவு நிரம்பிய; தன்னிடம் ஒன்றிய, தன்னையே தொடரும் இப்பக்தையின் அன்புடைகுருவான;

135. பக்தையின் உள்ளவானாகிய; உள்ளவானில் உதிக்கும் ஆதவனா-கிய; மனச்சோர்வினைப் போக்குகின்ற; சினமெனும் நெருப்பினை அணைக்கும் நீராகிய; கானமெனும் அமுதக் கடலான; தெய்வீக ஞானப்பழத்தை அருளும் தருவான;

136. பக்தையின் கஷ்டங்களாகிய முகிலுக்குக் காற்றான; கதிரவன் குலத்-துதித்தோனின் (ஸ்ரீராமனின்) பக்தரான; பக்தைக்கு உள்ளிழுக்கும் மூச்சுக்காற்றேஆன; பக்தையின் இதயக்கடலினைப் பொங்கச் செய்-

யும் நிலவான;

187. பண்ணினால் வண்ணமூட்டப்பட்ட பக்தியுடை எண்ணமலர்களின் நறுமணம் கமழும் மனமெனும் கொடிவீட்டினில் மதமுடை வண்டி-னம் முரலும் இன்னொலிகலந்த குயிலிசையின் இன்னோசையாம் நாமகீர்த்தனத்தின் இசைக்கூத்தினில் வசித்திடும் குருவர!

188. நாதப்பூங்கொடியில் இன்பக்குயில்களும் தேன் வண்டுகளும் ராம, க்ருஷ்ண நாமங்களை இனிதொலிக்க, நாமப்பூக்களை வாரி இறைக்க, அன்புத் தேன்சொட்டும் ராகப் பூங்கொத்துக்கள் நிறைந்த பக்தியெ-னும் கொடிப்பந்தலான!

189. பக்தியுடை உள்ளத்தை ராகக்கொடிப்பந்தலாகவே ஆக்குகின்ற; இவ்-வெண்ண மலர்களுக்கு இன்பநிறைமதியான;

140. பக்தையின் அன்புடை இதயத்தடாகத்தினை ஒளிரச்செய்யும் வெள்-ளிக்கதிர்ப்பண்மதியான;

141. சிஷ்யையின் பக்திமிகு இதயத்தடாகத்தில் பண்ணெனும் அல்லியினை மலரச்செய்யும் வெள்ளிக்கதிர்களுடை தண்மதியான;

142. உலகின் ஆரவார அமளியினின்று தப்புவதற்குப் புகலிடமான மோன அமைதி கொண்ட கானமலையின் முழைஞ்சாகிய;

143. ஹிமாலயத்தில் (பனிக்கோவில் எனப்படும் இமயமலையில்) உறைந்த பனித்தடாகக் கரையில், இனிய ராகாலாபனை செய்து பனியை உருக்கிடும்; விடாது பிடித்துக்கொண்ட இப்பக்த மனதுள் ஒன்றி உறைந்த;

144. சிக்கெனப் பிடித்த இப்பக்த இதயத்தில் நாதத்திற்கான ஏக்கம் கொழுந்துவிட்டெரியும் அனற்பிழம்பினால் உருகும் இதயங்கொண்ட நாதகுரோ!

145. ப்ரஹ்ம முஹூர்த்தத்தில் எழுப்பித் தன்முன் பாட வைத்துக் கான முயற்சிப் பயனுகர்வருளும் நாதாசார்ய!

146. கலையில் திறனருளும்; ஆனந்த அலைகளை எழுப்பும்; ப்ரார்த்திக்கும் பக்தைக்கு ஆத்ம தர்சனமருளும்;

147. மனோவாக்குக்கெட்டாத ஆத்மானந்தமருளும், அழகினிமையாய்ப் பாடும், இன்முகத்துடன் புன்னகைக்கும், ஒரே பரம்பொருளான;

148. நாத இன்பக்கடலான/நாத இன்பப் பொக்கிஷமான;

149. நாதத்திற்குப் பேராவல் கொண்ட பக்தமனக் கடலைப் பொங்கச் செய்யும் அமுதக்கிரணங்கள் கொண்ட நாதத்தண்மதியான - மனக்-கடலை நாதமாம் அமுதம் நிரம்பச் செய்யும்; விண்ணைத்தொடும் நாதப்பேரொளியான; வானளாவிய நாதச்சிறப்புடைய;

150. நாதவெளியான; நாதவானில் சுடர்விடும் மணியான (நாதவானில் ஆதவனான); நாத ஒளிக்கற்றையை வடித்துப் பரப்பும்;

151. நாதசக்தி அருளும்; நாதத்துடன் ஒன்றுபடச்செய்யும்;

152. நாதத்தை இருப்பிடமாகக் கொண்ட; நாதத்தின் பெருமையினை ஒலிக்கும்; நாதக் கடவுளான; நாதத்தின் அடிப்படையான; நாதத்தின் இருப்பிடமான;

153. ப்ரணவ நாதத்தின் உருவே!

154. நாதப்ரஹ்மானந்த!

155. நாத வடிவில் ப்ரஹ்மஞானமருளும்;

156. நாதத்தையே கருத்தூன்றி விரும்பும் இப்பக்தையின் சித்தத்துள்ளுள்ள நாத ஒளியான; எல்லையில்லா நாத ஒளிவட்டமான;

157. ஒளிமயமான, முழுமையான நாதவடிவே!

158. இத்துதிமண்டலத்தை வந்தடைந்த / இத்துதிமண்டலத்தில் மகிழும்;

159. அருட்கிளர்ச்சியின் மூலமான சலனமற்ற உள்ளத்தின் நீடமைதியாகிய;

160. உட்கிளர்ந்து மலர்ந்த உள்ளஉணர்வெனும் புஷ்பத்தால் ஸேவிக்கப்பட்ட நாதகுரோ!

161. எந்த ஒருதுதியும் நிந்தனுக்கு மிகையாகாது!

162. உச்சரித்ததுமே புல்லரிக்கச் செய்திடும் திவ்யத் திருநாமமுடையோய்!

163. ஸத்குருஸ்வாமின்!

164. ப்ராணாத்மன் (என் உயிரும் ஆத்மாவும் ஆகிய குருவே)!

165. எனக்கு நின் தர்சனம் தந்தருள்க!

166. மங்களமான எண்ணமலர்களினும் மானஸ புஷ்பார்ப்பணம் செய்யப்பட்ட மலரடி இணைபடைத்தோய்!

167. நிந்தன் திருவடிதனை சரணமடைகிறேன்!

168. தெரியாமல் செய்யப்பட்ட என் பிழைகளைப் பொறுத்தருள்க!

169. எனது ஸஞ்சித கர்மத்தினைச் சாம்பலாக்குக!

170. என்னை நின்னுடன் ஒன்றுபடச்செய்க!

(ஸத்குரு திருவாய் மலர்ந்தருளல்)

அப்படியே ஆகட்டும்!

உனக்கு மங்களம்!

ஓம்.

ஸ்ரீராமஜயம்

# ஸத்குரு ஸ்ரீத்யாகப்ரம்ம மங்களாஷ்டகம்

## ஓம்

நாதப்ரம்மாவதாரத்துக்கு, தனது இன்பமாகிய ராமனைப் பாடியவருக்கு, ராகம், ஸ்வரம், லயம் இவற்றினை அடைவிப்பவருக்கு (ராகம், ஸ்வரம் இவற்றினில் ஒன்றுதலை - ராகம், ஸ்வரம் எனும் பேரின்பநிலையினில் ஒன்றுதலை அருள்பவருக்கு), த்யாகராஜருக்கு மங்களம்.

ஸங்கீத யோகத்தில் தலைசிறந்தவருக்கு, நற்கீர்த்தனைகளினால் நற்புகழ் படைத்தவருக்கு, ஸங்கீத குருதேவருக்கு, த்யாகராஜருக்கு மங்களம்.

பகைவருக்கு அச்சமூட்டும் பகவானைப் பாடியவருக்கு, இன்னிசைப் பெருக்குக்கு முதன்மையானவருக்கு, ருத்ரனின் உயர்ந்த ஈசனை (ஸ்ரீராமனை)த் துதித்துப் பாடியவருக்கு, த்யாகராஜருக்கு மங்களம்.

கங்கையின் புனிதமூட்டும் கானமிசைத்தவருக்கு, அத்புதமான பாட்டுக்களை இசைத்த காந்தர்வருக்கு, கீதமண்டலத்தின் ஒளியுடையவருக்கு, குருநாதருக்கு மங்களம்.

மங்களமான, மங்களம் உண்டாக்கும் வாக்ப்ரவாஹம் பொழிந்தவருக்கு, இனிமையே ஆன மொழியுடையவருக்கு, மௌனத்தின் மூலம் உபதேசம் செய்யும் குருவுக்கு, த்யாகராஜருக்கு மங்களம்.

பஞ்சநதமெனும் புண்யத்தலத்துதித்த ஒளிச்சுடர் ஸூர்யனானவருக்கு, ஒப்புயர்வற்ற இறைவனாம் ஹரியைப் பக்கத்தில் கொண்டவருக்கு, முழுமை நிலையினை உணர்த்தும், பூஜைக்குரியவருக்கு, த்யாகராஜருக்கு மங்களம்.

நற்பேறருளும் ஸ்ரீராமனிடம் அன்பு கொண்டவருக்கு, உயர்நிலை, ஒளியாகிய ஸ்ரீராமனை அன்புப் பண்ணினால் (வண்ணம் தீட்டி) மகிழ்வூட்டியவருக்கு, ஸ்ரீராமனை த்யானித்த, தெய்வீகமானவருக்கு, த்யாகராஜருக்கு மங்களம்.

நிஷாதமன்னனின் நண்பனின் நண்பருக்கு (குஹனின் நண்பனாகிய ஸ்ரீராமனின் நண்பருக்கு), ஒருமைப்பாட்டினை அருள்பவருக்கு, ஸங்கீதமெனும் புஷ்பப்பொழிவினால் பூஜிக்கப்பட்டவருக்கு, த்யாகராஜருக்கு மங்களம்.

ஓம்.

மங்களம்.

ॐ

श्रीविद्यारामकृष्णाय गायत्रीसारगातवे ।
श्रीवत्सपुष्परामाय त्यागराजाय मङ्गलम् ॥

ॐ